# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...




KALKI • 25.01.2009 • ரூ.10.00 • 96 பக்கங்கள்

ருமங்கலம்



பருமைக்குரிய வெற்றியா?

# க்ளோபல் ரஹ்மான்!



# உத்திரவாதமான மேனிப் பராமரிப்பு
# தலைமுறை தலைமுறையாக

50 ஆண்டுகளுக்கும் மேலாக, மேனிப் பராமரிப்பில் ஸிந்தால் நம்பகமான சோப் என்று தொன்றுதொட்டு பெயர் பெற்றுள்ளது. ஸிந்தால் சோப் மேனியின் எழிலை மேம்படுத்துகிறது. இதன் ஒப்பற்ற நறுமணம் நாள் முழுவதும் நீடித்து உங்களை புத்துணர்வுடன் வைக்கும். எனவே ஸிந்தால் பல தலைமுறைகளாக விசுவாசமான வாடிக்கையாளர்களை உருவாக்கியதில் ஆச்சரியமில்லை.




**மேனிப் பராமரிப்பு என்றென்றும்**

Orchard B GCPMSOCN 116708

# கல்கி 25.01.2009

02 க்ளோபல் ரஹ்மான்!

06 திருமங்கலம் - பெருமைக்குரிய வெற்றியா?

14 சத்யம் தழைக்கட்டும் -தலையங்கம்

88 கலக்க வருது கல்கி





மும்பை நகரத்துக் குடிசைப் பகுதியைச் சேர்ந்த ஜமாலுக்கு, கால்சென்டரில் டீ வாங்கித் தருகிற வேலை. அவனுக்கு, கோடி ரூபாய் பரிசளிக்கும் குரோர்பதி டீ.வி. நிகழ்ச்சியில் பங்கேற்க வாய்ப்பு கிடைக்கிறது. ஒவ்வொரு கேள்விக்கும் சரியான பதிலைச் சொல்லி அனைவரையும் ஆச்சரியத்தில் மூழ்கடிக்கிறான். கோடி ரூபாய் பரிசைத் தொட இன்னும் ஒரே ஒரு கேள்வி இருக்கும்போது, அன்றைய நிகழ்ச்சி முடிந்து, மறுநாள் தொடரும் என அறிவிக்கப்படுகிறது.

படப்பிடிப்பைவிட்டு வெளியே வரும் ஜமாலை, ஓரம் கட்டி ஸ்டேஷனுக்குக் கொண்டுபோய் லாடம் கட்டுகிறது போலிஸ். 'சொல்! என்ன தில்லுமுல்லு செய்து ஜெயித்தாய்?' என்ற மிரட்டல் கேள்விக்கு, 'எனக்குப் பதில் தெரிந்திருந்தது! அவ்வளவுதான்! என்னிடம் ஏன் அந்தக் கேள்விகளைக் கேட்டார்கள் என்று எனக்குத் தெரியாது' என்கிறான் அவன். அப்புறம் மெதுவாக ஃப்ளாஷ் பேக் விரியும். அவனிடம் கேட்கப்பட்ட ஒவ்வொரு கேள்விக்கும் சரியான விடை சொல்லும் விதமாக, அவனது வகையில் ஒரு சம்பவம் நடந்திருக்கும். படம் பார்ப்பவர் நெஞ்சம் நெகிழ்ந்துபோகும். கடைசியில் போலீஸ் கன்வின்ஸ் ஆகி, அவனை மறுநாள் போட்டியில் பங்கேற்க அனுப்பி வைப்பார்கள். கடைசி கேள்விக்கும் பெரும் சஸ்பென்ஸ் கொடுத்து, சரியாகப் பதிலளித்து 'கோடீஸ்வரனாகிறான்.

ஸ்லம் டாக் மில்லியனர் ஃப்ரேமுக்கு ஃப்ரேம் விறுவிறுப்பு கொண்டது. இந்த அற்புதமான படத்துக்குப் பெரிய பலம்

# க்ளோபல்

ரஹ்மானின் பின்னணி இசை. ஆஸ்கார் கனவு காணும் இந்திய திரைப்பட உலகுக்கு, நான்கு கோல்டன் குளோபல் விருதுகள் கொடுத்துக் கௌரவித்திருக்கிறார்கள். அதில் ஒன்று இசைக்கானது. விருதுக்கு நாமினேஷன் செய்தபோதே, 'ரஹ்மானுக்கு விருது நிச்சயம்' என்று எதிர்பார்க்கப்பட்டது. 'இது இந்தியாவின் நூறு கோடி மக்களுக்கும் கிடைத்த கௌரவம்' என்று விருதைப் பெற்றுக் கொண்ட ரஹ்மான் சொன்னார்.

'இந்தப் படத்துக்கு இசை அமைக்க முடியுமா?' என்று கேட்டசமயத்தில், 'நான் ரொம்ப பிஸி' என்று சொல்லி மறுக்க இருந்தேன். ஆனால், என் உள்ளுணர்வு, 'அப்படிச் சொல்லாதே' என்றது. நான் இசை அமைக்க சம்மதித்தேன். அண்மையில் அமெரிக்காவில் ஆஸ்கார் விருதுக் குழுவினர் சிலர், 'நாங்கள் பார்த்த மிகச் சிறந்த படங்களில் ஒன்று 'ஸ்லம் டாக் மில்லனயர்' என்று பாராட்டினர். அத்தனை பெருமையும் படத்தின் இயக்குனர் டானி பாய்ல்க்குத்தான். படத்தில் இடம்பெற்றுள்ள 'ஜெய் ஹோ' என்ற பாட்டு இந்தியில் இருந்தாலும், அமெரிக்கர்களையும் கவர்ந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது'' என்கிறார் இசைப் புயல் ரஹ்மான்.

'' 'ஜெய் ஹோ' பாட்டு ஆஸ்கார் விருதுக்குக்கூட நாமினேட் செய்யப்பட்டுள்ளதே?''

''ஆமாம்! ஆஸ்கார் விருதும் கிடைக்கும் என்று நம்புவோம்'' என்கிறார் ரஹ்மான்.

- பரத்ராம்

# ரஹ்மான்!




கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்: லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர்: சீதா ரவி

உதவி ஆசிரியர்: கதிர்பாரதி

வடிவமைப்பு: எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன், பா.கோபால்

தொலைபேசி: 044 - 4343 8888 (30 lines)

தொலைநகல்: 044 - 4343 8899

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு: kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு: marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு: subscription@kalkiweekly.com

பிற தகவல்கள்: info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி: www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு:
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-

வெளிநாடு (விமானத்தபால்):
ஒரு வருடம் : ரூ.3,800/-

Bharathan Publications Private Limited,
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.




காரணம் மனமுதிர்ச்சிதான்.

அவரது பாட்டி ரங்கநாயகியும் எழுத்தாளர். ரங்கநாயகி எழுதிய 'சந்தியா' என்கிற நாவல் ஆர்.சூடாமணியின் முயற்சியால் வெளிவந்தபோது, அதிகம் பிரபலமாகாத ரங்கநாயகியின் நூலை அறிமுகப்படுத்த மதிப்புரையில் 'இவர் ஆர்.சூடாமணியின் பாட்டி' என்று குறிப்பிட்டேன். தமது பெயர் தேவையில்லாமல் விளம்பரதொனியில் இடம்பெறுகிறதென்று அதற்கும் ஆட்சேபித்தார். பின் நீண்ட வாதத்துக்குப் பின் சம்மதித்தார். இன்றைய இலக்கிய சூழலோடு இதை ஒப்பிட்டுப் பார்த்தால், அந்தப் பண்பின் உன்னதம் விளங்கும். எந்த இலக்கிய

# "திருப்தி இல்லாவிட்டால்

சமீபத்தில் தென்னிந்திய புத்தக விற்பனையாளர் மற்றும் பதிப்பாளர் சங்கம், மூத்த சிறுகதையாளர் ஆர்.சூடாமணிக்கு ஒரு லட்சம் பொற்கிழி விருது அறிவித்தது. கல்கிக்காக ஆர்.சூடாமணியைப் பேட்டிக்கு அணுகியபோது, 'எனக்கு விளம்பரங்களில் விருப்பமில்லை' என மறுத்துவிட்டார். ஆயினும், கல்கியில் அவர் ஆற்றிய பங்களிப்பு அதிகம். அதனால், அவரைப் பற்றிய சிறப்புகளை, தகவல்களையாவது இன்றைய தலைமுறை வாசகர்களிடம் பகிர்ந்துகொள்ள மூத்த எழுத்தாளர் திருப்பூர் கிருஷ்ணனை அணுகினோம். அவர் பேசியதிலிருந்து:

''எழுபத்தைந்து வயதைத் தாண்டிய ஆர்.சூடாமணி 300க்கு மேற்பட்ட சிறுகதைகளை எழுதியவர், உள்ளக்கடல்' - என்ற நாவலும், பரிசுபெற்ற ஒரு நாடகமும் எழுதியுள்ளார். இவர் இயல்பிலேயே புகழை விரும்புவதில்லை. அதற்குக் காரணம் மனமுதிர்ச்சிதான்.

மேடைகளுக்கும் அவர் வந்ததில்லை. அவரின் எழுத்துதான் வாசகர்களுக்குத் தெரிந்த அருபமுகம். எனக்குத் தெரிந்து பத்திரிக்கைகளில் அவரின் புகைப்படம் கூட வெளிவந்தது இல்லை. 'போட்டோ எதற்கு? வாசகனுக்கு எழுத்துதான் எனது முகம்'- என்பார். நான்கு சகோதரிகளுடன் பாசப் பிணைப்பிலிருக்கும் அவர், திருமணம் செய்யாமல், எழுத்திலேயே தம் வாழ்வின் அர்த்தத்தைப் பதிப்பித்துக் கொண்டவர்.

நான் தீபம், தினமணியில்... பணிபுரிந்தபோது, அவரிடம் கதை கேட்டால் கதையையும், அதனுடன் 'திருப்தியில்லாவிடில் திருப்பி அனுப்பவும்' என்ற கடிதமும், கூடவே அஞ்சல் தலை ஒட்டிய சுயமுக வரியிட்ட உறையும் வரும். இதுவரை அவரின் கதையை நான் திருப்பி அனுப்பியதே இல்லை!

அவரது கதைகள் உளவியல் பரிமாணத்

தோடு இருக்கும். மனமும் மனப் போராட்டமும் பிணைந்திருக்கும். அவரை 'சூடாமணி' என்று அழைத்தால் கோபப்படுவார். 'ஆர்.சூடாமணி என்றுதான் அழைக்க வேண்டும்' என்பார். என்ன காரணம், 'அப்பா மீதான அபரிமிதமான அன்பின் வெளிப்பாடுதான் அந்த இன்ஷியல்' என்பது அவர் கருத்து. 'கதைக்கான கருவை வெளியே தேட வேண்டியதில்லை- வாழ்க்கையை அவதானித்தாலே போதும்' என்கிற ஆர்.சூடாமணியின் 'உனக்கு இந்த நிறம்' என்ற சிறுகதை எனக்குப் பிடித்த விசேஷ கதை.

அந்தக் கதை நிறங்கள் குறித்தான உளவியல் ரீதியான சிந்தனையை முன் வைக்கக் கூடியது. நிறத்தின் அடிப்படையில் ஒரு சகோதரி, சக சகோதரிகளால் எப்படிக் கேலிக்குள்ளாக்கப் படுகிறார் என்பதையும், ஒரு மனைவி தன் கணவனால் எப்படி கையாளப்படுகிறார் என்பதையும், அவரவர் மன நிலைக்கு ஏற்ப விவரித்துள்ளதில் அவர் வித்தியாசப் படுகிறார்'' என்கிறார்.


* திருப்பூர் கிருஷ்ணன்

- அமிர்தா

# திருப்பி அனுப்புங்கள்!"

# புத்தகச் சந்தையா? கண்காட்சியா?

* சென்னையில் நடந்த புத்தகக் கண்காட்சியில், இந்த முறை தனிநபர் ஸ்டால்களில் வியாபாரம் குறைச்சல்தானாம்.

* பெட்ரோல் பற்றாக்குறை, கம்ப்யூட்டர் துறை மட்டுமின்றி நிறைய தொழிற்சாலை மூடல்களாலும் புத்தக விற்பனை பாதித்துள்ளது.

* 'உலக சினிமா' நூலுக்குச் சமீபத்தில் தமிழக அரசு பரிசுப்பெற்ற எழுத்தாளர் அஜயன்பாலா கூறுகையில், ''புதிய மாறுதலாய்க் குழந்தைகளின் வருகையும் அவர்கள் புத்தகம் வாங்குவதும் அதிகரித்துள்ளது. இப்போது எழுத்தாளர் மீதான கவர்ச்சி குறைந்துவிட்டது. இன்றைய தலைமுறைக்கான போதிய எழுத்தாளுமைகள் இல்லை; எனவே, பிரமிப்பும் இல்லை. வாஸ்து, சமையல் நூல்கள்தான் இன்னும் முதல் நிலை விற்பனையில் இருக்கின்றன''என்கிறார்.

* கவிஞர் திலகபாமா... ''இது கண்காட்சியல்ல - சந்தை. அறிவுத் தளத்தில் உள்ளோர், வியாபார தளத்திலுள்ள எல்லா யுக்திகளையும் கடைபிடித்து, தங்கள் அறிவை விற்கும் இடமாகவும், சந்திப்புக்கான நூல் பூங்காவாகவும் மட்டுமே இச்சந்தை உள்ளது. எப்போதும் என்னை இது கவர்வதே இல்லை''என்கிறார்.


* திலகபாமா * அஜயன்பாலா

'வோட்டுப் பதிவு நடந்த அன்று மாலையே அண்ணன், "40,000 வோட்டுகள் வித்தியாசத்தில் நாம் வெற்றிபெறுவோம்" என்று சொல்லிவிட்டார் என்று ஆச்சர்யம் அகலாத குரலில் நம்மிடம் சொல்கிறார் லதா அதியமான். இடைத் தேர்தலில் தி.மு.க. வேட்பாளராக நின்று 'வென்றதன்' மூலம் சில நாட்களில் தமிழகத்தின் பிரபலமாகிவிட்டார்!

1980ம் ஆண்டு நடந்த சட்டமன்றத் தேர்தலில் தி.மு.க.வும், காங்கிரஸும் கூட்டணி. அது கண்டிப்பாக ஆட்சிக்கு வந்துவிடும் என்று மக்களிடையேகூட எதிர்பார்ப்பு இருந்தது. தேர்தல் முடிவு வருவதற்கு முதல்நாளே கருணாநிதியை ராஜராஜனாக வர்ணித்து போஸ்டர்கள் தயாராகிவிட்டன. வள்ளுவர் கோட்டத்தில் பதவியேற்பு... என தடபுடலாக ஏற்பாடுகள். ஆனால் கருணாநிதிக்குக் கடும் ஏமாற்றம்! மீண்டும் எம்.ஜி.ஆரை ஆட்சியில் அமர்த்தினர் மக்கள். காலம் ஓடினாலும் காட்சிகள் மாறுவதில்லை. திருமங்கலம் இடைத்தேர்தல் முடிவு வரும் முன்னரே 'ஹாட்ரிக் நாயகன்' என்று பத்துத் தலையுடன் (இராவணன்?) அழகிரியைப் போட்டுப் பிரம்மாண்டமான போஸ்டர்கள் மதுரையில் ஒட்டப்பட்டன. ஆனால், அப்பாவைப்போல் ஏமாறாமல், தனது 'திறமையால்' வெற்றிக்கனியைப் பறித்துவிட்டார் அழகிரி!

திருமங்கலம் தேர்தல் அறிவிப்பு வந்தபோது முடிவைப் பற்றிய நம்பிக்கையின்மையோடு



# திருமங்கலம் பெருமைக்குரிய

அதை விமர்சித்த கருணாநிதி, 'ஒரு பெண்ணை நிறுத்துவதன், மூலம் தாய்க்குலங்களின் வோட்டுக்களை அதிகம் பெறமுடியும்' என்ற நோக்கத்தில் நிற்க வைக்கப்பட்டவர்தான் லதா அதியமான்.

'தொகுதிக்கு என்ன செய்வதாக இருக்கிறார்?

"நான் பிரசாரம் போன கிராமங்களில், சாலை வசதி, பேருந்து வசதி கேட்டார்கள். தனி நபர்கள், முதியோர் பென்ஷன், பெண்கள் நலத்திட்ட உத

விகள் கிடைக்கவில்லை என்று சொன்னார்கள். அழகிரி அண்ணன், மற்றும் தளபதி ஸ்டாலின் வழிகாட்டுதலில், தொகுதியில் என் பணிகளைத் தொடர்வேன். அண்ணன் அழகிரி, தனிப்பட்ட முறையில், சிறப்புக் கவனம் எடுத்துத் தொகுதியை



* கருணாநிதி

வளப்படுத்துவதாகச் சொல்லியிருக்கிறார்'' என்கிறார் லதா அதியமான்.

''பணம், அதிகார துஷ்பிரயோகத்தால் கிடைத்த வெற்றி என்று எதிர்கட்சிகள் சொல்கின்றனவே?

# வெற்றியா?

''தோல்விக்குச் சொல்லும் நொண்டிச் சாக்குகள். அப்படியே பணம் கொடுத்ததாக வைத்துக் கொண்டாலும், மக்கள் சரியாக வோட்டுப் போட வேண்டுமே. டாக்டர் கலைஞர் அவர்களின் சாதனைகள் காரணமாகத்தான் நாங்கள் ஜெயித்தோம். அதிலும் குறிப்பாக, 'ஒரு ரூபாய் அரிசி. மக்களிடையே எங்களுக்குப் பெருத்த ஆதரவைச் சேர்த்தது'' என்கிறார் லதா. தேர்தல் நெருக்கத்தில், மாமியார், மைத்துனர்கள் ஜெயலலிதா பக்கம் தாவியதைப் பற்றிக் கேட்டபோது ''எனது கணவர் அதியமான் இறுதி வரை தி.மு.க.வில் இருந்தவர்' என்றார் லதா.

தி.மு.க 'பணநாயகம்' ஜனநாயகத்தின் குரல்வளையை நெரித்துவிட்டதாக ரி-ஆக்ட் செய்யும் ஜெயலலிதா, ''தி.மு.க ஆட்சியில் இனி இடைத்தேர்தலே வேண்டாம்'' என்று சலித்துப்போய்



* அழகிரி

கூறியிருக்கிறார்! இவரது ஆட்சிக் காலத்தில் சாத்தான்குளம் மற்றும் சைதாப்பேட்டை இடைத்தேர்தல்களில் அ.தி.மு.க எப்படி 'விளையாடியதோ' அதைத்தான் தி.மு.க. வும் ரிப்பீட் செய்திருக்கிறது.

சென்றமுறை வாங்கியதைவிட, ஆறாயிரம் வோட்டுக்கள் குறைவாக வாங்கியிருக்கிறது தே.மு.தி.க. 'ஏதோ இந்த அளவுக்காவது வாங்கினாரே!' என்று மக்கள் விஜயகாந்தைப் பற்றிச் சொல்கிறார்கள். ஆனால், தேர்தல் பிரசாரத்தில், மக்களை எரிச்சல்படுத்தும் விதமாக

ஒன்றிரண்டு இடங்களில் நடந்துகொண்டதை, விஜயகாந்த் தவிர்த்திருக்க வேண்டும். மிகவும் பரிதாபமாக நிற்பது சரத்குமார் கட்சிதான். கட்சிக்குள் பலர் 'போட்டியிட வேண்டாம்' என்று சொன்ன போது, சில பிரமுகர்களின் தவறான வழிகாட்டுதலால் நின்று, 'எக்ஸ்போஸ் ஆகிவிட்டார் சரத். இனி, பாராளுமன்றத் தேர்தலில் அவருடன் கூட்டணி வைக்க யாரும் ஆர்வம் காட்டமாட்டார்கள்.

திருமங்கலம் வெற்றி, பாராளுமன்றத் தேர்தல் கூட்டணியில் பெரிய மாறுதல் எதையும் கொண்டு வராது என்றே தோன்றுகிறது. தி.மு.க.வுடன் காங்கிரஸ் இருக்கும்வரை கம்யூனிஸ்டுகள் அதில் இணையப் போவதில்லை. ஆனால், பா.ம.க தடுமாற்றம் தொடர்கிறது. ''உங்களுக்கு அதிக பட்சமாக தொகுதிகள் தருகிறோம்'' என்ற ஆசை வார்த்தைகள் தி.மு.க. தலைமையால் சொல்லப்பட்டாலும் ,ஊசலாடுகிறார் டாக்டர் ராமதாஸ். விஜயகாந்தை வளைத்துப் போட காங்கிரஸும், அ.தி.மு.க.வும் தொடர்ந்து முயற்சித்து வருகின்றன.



* லதா அதியமான்

இந்த நிலையில் அழகிரி தென் தமிழ் நாட்டுக்கு அமைப்புச் செயலாளராக நியமிக்கப்பட்டிருக்கிறார். அமைப்புச் செயலாளர் பதவி என்பது தி.மு.க.வில் கௌரவமான குமாஸ்தா பதவி போன்றதுதான். ஆனால், அழகிரி இந்தப் பதவிக்கு ஒரு புதிய பரிமாணத்தைத் தருவார் என்று எதிர்பார்க்கலாம். ஏற்கெனவே அவர் பிடியில் இருந்தது மதுரை. இப்போது பிடி இறுகியிருக்கிறது!

– ப்ரியன்

## ஆயிரத்தில் ஒருவன்



# சுருள் சுருளாய் வருமானம்!

இந்தியாவில் பெரும்பாலான குடும்பங்களில் கோயமுத்தூர் ராமானுஜத்துக்கு 'குட் நைட்' சொல்லிவிட்டுத்தான் தூங்குவார்கள். புரியவில்லையா? 'குட் நைட்' கொசுவர்த்திச் சுருள் மற்றும் திரவம் ஆகியவைகளை உற்பத்திசெய்து, சக்கைபோடு போடுபவர்தான் தொழிலதிபர் ராமானுஜம்.

ராமானுஜம், துவக்கத்திலேயே கொசுவர்த்தி உற்பத்தியில் இறங்கவில்லை. 1992ல் 'ஆட்டோ மேக்ஸ் ஆன்ஸிலரி இண்டஸ்ட்ரீஸ்' என்ற பெயரில் 50,000 ரூபாய் முதலீட்டில் சிறுதொழிலகத்தைத் துவக்கினார். கோவையில் உள்ள நூற்பாலைகளுக்கு வேண்டிய உதிரிபாகங்களும், ஆட்டோ மொபைல் தொழிலுக்கு வேண்டிய, பிளாஸ்டிக் பாகங்களும்தான் முதலில் ராமானுஜம் உற்பத்தி செய்தவை. தமது விடாமுயற்சி மூலம், அதுவரை மார்க்கெட்டில் கொடிகட்டிக் பறந்துக்கொண்டிருந்தவர்களை ஓரம்கட்டினார். நூற்பாலை இயந்திரங்களின் முக்கியத் தேவை, பாபின் ஹோல்டர் என்ற உதிரிபாகம். இந்த உதிரிபாகம் அகமதாபாத்திலிருந்து வந்துகொண்டிருந்தது. அந்தப் பாகத்தை உற்பத்தி செய்வதில், தமது தனித் திறமையைக் காட்டினார் ராமானுஜம். இன்று உலக அளவில் நூற்பாலைகளுக்குத் தேவையான பாபின் ஹோல்டர், எண்பது சதவிகிதம் இவரின் தொழிலகத்தில் உற்பத்தி ஆவதுதான். இன்னமும் சைனாவுக்குத்தான் அனுப்பமுடியவில்லை. ''நமக்கு சரியான போட்டி சைனாதான்'' என்கிறார் ராமானுஜம்.

இவர், ஊழியர்களை தேர்ந்தெடுக்கும்போது படிப்பை ஒரு முக்கியத் தகுதியாகக் கருதினாலும், ஓர் இளைஞனுக்கு கற்றுக்கொள்ளும் ஆர்வம், கடும் உழைப்பு, இரண்டும் கட்டாயம் இருக்கவேண்டும் என்று கருதுகிறார். இவரது தொழிலகங்களில் இன்று ஐந்நூறு பேர் வேலை செய்கிறார்கள். இவர்களில் தொண்ணூறு சதவிகிதத்தினர் டிப்ளமா ஹோல்டர்கள் மற்றும் பள்ளியோடு படிப்பை முடித்தவர்கள்தான். எல்லோருக்கும் தங்க இடம் கொடுத்துத் தனது குடும்பத்தைப் போலவே பார்த்துக் கொள்கிறார். ''எங்கள் நிறுவனங்களின் வெற்றிக்குப் பின்னால்,

13

'மாஃபா' பாண்டியராஜன்

முகம்தெரியாத அந்த உழைக்கும் கரங்கள் இருக்கின்றன'' என்று பெருமையுடன் சொல்கிறார்.

இன்று உற்பத்தித் துறை இந்தியாவில் சுமார் ஒரு கோடி பேர்களுக்கு வேலை வாய்ப்பினைக் கொடுக்கும் மாபெரும் துறையாக விளங்கிக்கொண்டிருக்கிறது. உற்பத்தி என்றாலே பலருக்கு கார், லாரி பஸ்தான் நினைவுக்கு வரும். ஆனால், ஒரு மூலப்பொருள் அல்லது பல மூலப் பொருட்கள், ஒரு குறிப்பிடத்தக்க முறை யில் இயந்திரங்கள் வாயிலாக மாற்றம் அடைந்து இறுதியில் உபயோகமுள்ள ஒரு பொருளாக வெளியே வருவதுதான் உற்பத்தி. உதாரணமாக, கண்ணாம்புக்கல், சிமெண்டாக வருவதும், ரப்பர் பால், டயராக உருமாற்றம் பெறுவதும்தான் உற்பத்தி. இந்த வகையில், உணவு பதப்




## பாண்டி 'S BLOG

"புலி மேல் பயணம் செய்பவன் போலத்தான் இருந்தேன்" என்று கம்பி எண்ணுவதற்கு முன்பு தமது இயக்குனர்களுக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார் சத்யம் கம்ப்யூட்டர்ஸ் தலைவராக இருந்த ராமலிங்க ராஜு. சத்யம் நிறுவனத்தின் தகிடுதத்தங்கள் அம்பலமாக, இன்று உலக அளவில் நமது ஐ.டி. நிறுவனங்களின் நம்பகத்தன்மை கேள்விக்குறியாகி, அவற்றில் வேலை செய்யும் லட்சக்கணக்கான இளைஞர்களும் இளம்பெண்களும் கலங்கித்தான் போயிருக்கிறார்கள்.

அமெரிக்காவில் எம்.பி.ஏ. படித்த ராமலிங்க ராஜு, முதலில் துவங்கியது ரியல் எஸ்டேட் மற்றும் கட்டுமானத் துறைதான். பின்னர்தான் கம்ப்யூட்டர் துறையில் கால் பதித்தார். 12,000 கோடி பற்று வரவுடன் 55,000 ஊழியர்களைக் கொண்டு திறம்பட நிர்வகிக்கப்பட்டு வந்த நிர்வாகம் கவிழ்ந்தது வேதனைதான். கம்பெனி பேலன்ஸ் ஷீட்டுகளில் கடனைக் குறைத்துக் காட்டி, லாபத்தை சிறிய அளவில் அதிகமாகக் காட்டத் துவங்கி, அந்த மோசடி வருடாவருடம் ரிபீட் ஆக, உலகப் பொருளாதாரம் உருகிய நிலையில் சமாளிக்கமுடியாமல் சிக்கிவிட்டார். சத்யம் மோசடிகளை முன்கூட்டியே மோப்பம் பிடித்து உலக வங்கி, தமது ப்ராஜெக்ட்டுகளை வாபஸ் வாங்கிக்கொண்டது.

அமெரிக்காவில் என்ரான் போன்ற



படுத்துதல், பாக்கேஜிங், ரசாயன உற்பத்தி, சுரங்கத்துறை, ஆயத்த ஆடைகள், மருத்து வச் சாதனங்கள் என்று உற்பத்தித் துறை எங்கும் வியாபித்து இருக்கிறது. ஒரு பெரிய ஸ்டேடியம் அல்லது பாலம் கட்டுகிறார்கள் என்றால் அது திட்டம். துணி தயாரிப்பது உற்பத்தி என்றால், நூற்பாலைகளை அமைப்பது திட்டம். ஒரு நாட்டின் வளர்ச்சி விகிதத்துக்கு முக்கிய அளவுகோலாக உற்பத்தித் துறை விளங்கு கிறது. ஆனால், உற்பத்தித் துறையின் வெற்றி, வேறு பல அம்சங்களைச் சார்ந்து இருக்கிறது. குறிப்பாக, மின்சாரம் மற்றும்

# பொறியியல் படிப்பின் எந்த ஒரு பிரிவைப் படித்திருந்தாலும் உற்பத்தித்துறையில் வேலைவாய்ப்பு உறுதி!

போக்குவரத்துத் துறை, உற்பத்தித் துறைக் குக் கைகொடுக்க வேண்டும். உற்பத்தி துறையிலுள்ள பெரிய நிறுவனங்களை நம்பி ஆயிரக்கணக்கான சிறு தொழில்கள் இருக்கின்றன. ஆனால், மின்சாரப் பற்றாக் குறை காரணமாகப் பெரிய தொழில்களும் அதற்கு ஆதாரமாக இருக்கிற சிறிய தொழில்களும் அடிக்கடி பாதிக்கப்படு கின்றன. பொறியியல் படிப்பின் எந்தப் பிரிவுகளைப் படித்தாலும், உற்பத்தித் துறையில் வேலை வாய்ப்பு நிச்சயம். அதுமட்டுமா? பள்ளிப்படிப்பை இடை யில் விட்டவர்களுக்கும் வேலை வாய்ப்பை வழங்கும் காமதேனுதான் உற்பத்தித் துறை.

**(வெளிச்சம் வீசும்)**

**எழுத்தாக்கம்: ஸ்ரீநி**

நிறுவனங்கள் இதுபோன்ற மோசடியில் கவிழ்ந்தபோது, ''இந்திய நிறுவனங்களில் இதுபோல நடக்க வாய்பில்லை' என்று நாம் பெருமைப்பட்டோம்! இதுபோன்ற சூழலில் அரசு நஷ்டத்தை ஈடுகட்டி நிறுவனத்தை எடுத்துக்கொள்வது சரியான அணுகுமுறையாக இருக்காது. மற்ற சத்யம் நிர்வாகிகள் கையில் பொறுப்பைக் கொடுக்கலாம். அல்லது வேறு பெரிய நிறுவனங்கள் அதை எடுத்துக்கொள்ளலாம். வேலை இழப்பிலிருந்து ஊழியர்களைக் காப்பாற்ற வேண்டும். இப்போது அரசு நடப்பதைப் பார்த்தால், ராஜுவைக் காப்பாற்ற அரசியல்வாதிகள் இறங்கியிருக்கிறார்களோ என்ற சந்தேகம் பொதுமக்களுக்கு எழும் வாய்ப்பிருக்கிறது.

இளம்தலைமுறை நடிகைகளில் தம் 'பளிச்' புன்னகையால் நம் அடி மனசில் ஒட்டிக்கொண்டவர் மோனிகா. 'இம்சை அரசன்' போட்டுக்கொடுத்த வளர்ச்சி பாதையில் முன்னேறி, கவர்ச்சிப் பாதையில் தடுமாறினாலும், 'அ.ஆ.இ.ஈ.' படம் மூலம் ரசிகர்கள் மனத்தில் ரவுசு செய்பவர். அவருடனான 'டகால்டி' பேட்டியிலிருந்து சிலத் துளிகள்...







**பெயர் ?**

மோனிகா

**அதென்ன மோனிகா?**

அழகான ராட்சஸின்னு அர்த்தம்! ***(யாரோ உங்ககிட்ட பொய் சொல்லிருக்காங்கன்னு அர்த்தம்)***

**செல்லப் பெயர்?**

மினிம்மா (நல்ல வேளை முனியம்மா இல்லையே?)

**அ.ஆ.இ.ஈ. அனுபவம்?**

எங்க அம்மாகிட்ட கேட்டுப் பாருங்க. ''நீ 'இ' எழுத கத்துக் கறத்துக்குள்ள, என் இடுப்பு உடைஞ்சுப் போச்சுன்னு அடிக்கடி சொல்வாங்க ***(நீங்க என்ன தாயி சொல்றீங்க)***

**அம்மா செல்லமா... அப்பா செல்லமா?**

அவங்க ரெண்டு பேரும் என்னோட செல்லம்ஸ். ***(இது நல்லா இருக்கே...)***

**காதல்?**

அற்பப் புழுவிலிருந்து அண்ட சராசரங்கள் வரைக்கும் அத்தனை விஷயங்களை அழகாக்கற மேஜிக் அது!

***(ரூம் போட்டு யோசிப்பீங்களோ?)***

**நீங்க எப்போ அழகாகப் போறீங்க?**

அழகுக்கே அழகா பாஸ்! ***(ஆத்தாடி!)***



(இப்பவே கண்ணைக் கட்டுதே)

விஜய், அஜித், சூர்யா... யார் அழகு?

எம்.ஜி.ஆர். (அய்யய்யோ, நீங்க அந்த லிஸ்ட்டா?)

சமீபத்தில் எதுக்காக அழுதீங்க?

மும்பையில் தீவிரவாதிகள் அட்டாக் பண்ணுனப்ப உண்மையாவே அழுதேன். அன்னைக்கு முழுக்கச் சாப்பிடவே இல்லை. (உங்களைப் பட்டினி போட்ட தீவிர வாதிங்களை உண்மையிலேயே உதைக்கணும்)

நட்பு?

கடவுளின் புனைப் பெயர் (கண்டிப்பா ஆள் போட்டுத்தான் யோசிச்சுருக்கணும்)

பொங்கல்ன்னதும் என்ன தோணும்?

சாப்பிடணும்னு தோணும்!

விளம்பரங்களில் நடிப்பீங்களா?

(சற்று யோசித்துவிட்டு) விளம்பரமில்லாமல் தொலைந்து போகாதே... விளம்பரத்தில் உன்னைத் தொலைத்து விடாதே! (நல்ல சமர்த்து)

வணக்கம்?

வாவ் வணக்கம்! (வெறும் வணக்கம்தான் தாயி)

- மகிமைராஜன்





# என் செல்லமே!



# கல்கி



2009 ஜனவரி 25
ஸர்வதாரி தை 12
மலர் : 67
இதழ் : 26

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## சத்யம் தழைக்கட்டும்!

**ச**த்யம் கம்ப்யூட்டர்ஸ் நிறுவனத்தில் 7000கோடி ரூபாய் அளவு மெகா மோசடி நடந்ததைத் தொடர்ந்து, உலக வங்கி வேறு சில அதிர்ச்சித் தகவல்களை வெளியிட்டுள்ளது. சத்யம் நிறுவனத்தை எட்டு ஆண்டுக் காலத்துக்கு பகிஷ்கரிப்புச் செய்தது போலவே, விப்ரோ, மெகாஸாஃப்ட் என்ற இரு இந்திய கம்ப்யூட்டர் நிறுவனங்களுக்கும் நான்காண்டுகள் வர்த்தகத் தடை விதித்திருப்பதாக அறிவித்துள்ளது. காரணம்?... இந் நிறுவனங்கள் உலக வங்கி ஊழியர்களுக்கு 'அத்து மீறிய' சலுகைகளை அளித்துள்ளன! உலக வங்கி கான்ட்ராக்டுகளைப் பெற, இந்நிறுவனங்கள் முறைகேடாக முயன்றன என்று அனுமானிக்க இடமிருக்கிறது. இதைச் சம்பந்தப்பட்ட நிறுவனங்கள் மறுத்துள்ளதுடன், 'ஓராண்டுக்கு முன்பே விதித்த தடையை, உலக வங்கி இந்தச் சமயத்தில் ஏன் கிளறவேண்டும்?' என்றும் எதிர்க்கேள்வி எழுப்பியுள்ளன!

ஆனால், சத்யம் நிறுவனத்தில் நடந்தது போன்ற ஊழல்கள் ஏன் நடக்கின்றன என்பதும் சிந்தனைக்குரியது. ஐ.டி. துறையைச் செல்லப் பிள்ளையாக பாவிக்கும் அரசு, ஏராளமான சலுகைகளை அத்துறை நிறுவனங்களுக்கு வழங்கி வருகிறது. அவற்றையும் அவற்றைக் கடந்து சில பல கூடுதல் சலுகைகளையும் பெற, அதிகாரிகளுக்கும் பதவியி லிருக்கும் அரசியல்வாதிகளுக்கும் ஒரு விலை தரவேண்டிய கட்டாயம் இந்த நிறுவனங்களுக்கு ஏற்படுகிறது. அவ்வாறு கொடுக்க கட்டாயப்

இடைத் தேர்தல் வெற்றி
பொருளாளர்
பணபலம்
அடியாள் பலம்
தேர்தல் பொறுப்பாளர்




படுத்தப்படுகிறபோது, நேர்மையானவர்கள்கூட தங்கள் நிலையிலிருந்து பிறழ நேர்கிறது. பொது வாழ்வில் இருக்கும் அரசியல்வாதிகள், அரசு அதிகாரிகள் நேர்மையின்றி நடந்து கொள்கிறபோது, 'நாமும் முறைகேடுகளில் ஈடுபட்டால் யார் கேட்பார்கள்?' என்ற துணிவு பிறக்கிறது. இத்தனைக்கும், ஐ.டி. துறையில் பெரிய பொறுப்பு வகிப்பவர்கள், இந்தியாவில் மிக அதிக சம்பளம் வாங்கும் பிரிவினரில் அடக்கம். அவர்களது நிறுவனங்கள் காணும் லாபமும் அபரிமிதமானது. அப்படியிருந்தும் அவர்களுக்குப் பேராசை பற்றிக்கொள்கிறது; எந்தப் பயமுமின்றி கோடிக்கணக்கில் முறைகேடு செய்யத் துணிகிறார்கள் எனில், அது அத்துறையின் வீழ்ச்சி. அளவுக்கதிகமாக ஐ.டி.துறையைச் சார்ந்திருப்பதால், நமது பொருளாதாரத்துக்கும் கடுமையான பாதிப்பு ஏற்படவே செய்யும்.

ஆனால், வீழ்ந்துவிட்ட ஒரு நிறுவனத்தையோ ஒரு துறையையோ தூக்கி நிறுத்த, அரசு எவ்வளவு தூரம் கைகொடுக்கலாம் என்பதையும் கவனமாக நிர்ணயிக்கவேண்டும். சத்யம் நிறுவனத்துடன் துளியும் சம்பந்தமில்லாத பொதுமக்களின் வரிப்பணம், அந்நிறுவனத்தை நிலை நிறுத்த திசைதிருப்பப்படுவது அநீதியாகிவிடும்.

பங்குமார்க்கெட் என்றாலே ஏற்றமும் இறக்கமும் இருக்கும். அதில் முதலீடு செய்வோர் அதற்குத் தயாராய்த்தான் இருக்கவேண்டுமேயொழிய, அரசு வந்து தங்களை நஷ்டத்திலிருந்து காக்கவேண்டும் என்று எதிர்பார்ப்பது சரியல்ல. சத்யம் சரிவைச் சீர்செய்வதில் அரசின் பங்கு, மேற்பார்வை அளவில் இருந்தாலே போதுமானது.

சத்யத்துக்காக அள்ளித் தரப்படும் அரசு நிவாரணம், நாளை இதர பல துறைகளின் இதர பல நிறுவனங்களால் முன்னுதாரணமாகக் கொள்ளப்படும்; 'முறைகேடுகளில் ஈடுபட்டாலும் அரசு உதவி பெறலாம்' என்கிற மோசமான சிந்தனையை விதைக்கும். அரசு மேற்பார்வையை மீறி, சத்யம் நிறுவனம் நலிந்து போனாலும் பாதகமில்லை; அது எதிர்காலத்துக்கு எச்சரிக்கையாக அமையும். சத்யம் கம்ப்யூட்டர்ஸ் வீழ்ந்தாலும் சத்யம் தழைக்கட்டும். ●

# அழகிய கனவும்

இங்கிலாந்து கிரிக்கெட் அணி சிதிலமடைந்த நிலையில் இருக்கிறது. இரண்டு வருடங்களுக்கு முன்னால் இங்கே கங்கூலி - சேப்பல் இடையே என்ன நடந்ததோ அதே சம்பவங்கள்தான் இப்போது பீட்டர்சன் - மூர்ஸ் இடையே நிகழ்ந்துள்ளது. ஈகோவினால் இருவர் பதவியும் பறிக்கப்பட்ட நிலையில், ஸ்டிராஸ் இங்கிலாந்தின் கேப்டன் பொறுப்பை ஏற்றுள்ளார். இந்த வேளையில் தற்போதைய இந்திய அணியை எண்ணிப் பார்க்க வேண்டியிருக்கிறது. தோனியும் சரி; கிரிஸ்டனும் சரி ஜாடிக்கேத்த மூடிபோல மிகப் பொருத்தமான ஜோடியாக, அவரவர் வேலையைச் செய்துகொண்டிருக்கிறார்கள். இன்றுவரை இருவரிடமும் சிறு மனஸ்தாபம்கூட ஏற்பட்டது கிடையாது. தோனிவசம் முழுப் பொறுப்பையும் ஒப்படைத்துவிட்டு, பின்னால் இருந்து சமர்த்தாக



இயங்கி வருகிறார் கிரிஸ்டன். சீனியர்களைச் சமாளிப்பதிலும் தோனியிடம் ஒரு பக்குவம் தெரிகிறது. தகுந்த சமயத்தில் சச்சின், ஜாகீர்கான் ஆகியோரின் ஆலோசனைகளைக் கேட்க அவர் தயங்குவதே இல்லை. அணியின் வெற்றிக்காக என்ன சமரசம் வேண்டுமானாலும் செய்யத் தயாராக இருப்பதால், யாருக்கும் தோனி-கிரிஸ்டன் மீது எந்தவித புகார்களும் இல்லாமல்போய் விடுகிறது. பி.சி.சி.ஐ. போன்ற சமதளமற்ற ஓர் அமைப்பில் இருந்து கொண்டு, தோனியும் கிரிஸ்டனும் இந்திய அணியின் கையைப் பத்திரமாகப் பிடித்துச்செல்வது உண்மையிலேயே ஆச்சரியமான விஷயம்தான். ●



சென்ற வருடம் இந்திய டென்னிஸுக்குப் போறாத காலம். நம்பிக்கை நட்சத்திரங்களான லியாண்டர் பயஸும் மகேஷ் பூபதியும் ஒலிம்பிக்கில் மீண்டுமொருமுறை தோற்றுப்போனார்கள். வருட இறுதியில் வெளிநாட்டில் வாழும் இந்திய டென்னிஸ் வீரர்கள் பற்றி சர்ச்சைக்குரிய புதிய விதி ஒன்றை இந்திய அரசு அமல்படுத்தியது. 'எதிர்கால டென்னிஸை இந்திய அரசு நசுக்க நினைக்கிறது' என்று முன்னாள் டென்னிஸ் வீரர்கள் கூப்பாடு போட்டார்கள். கூடவே இன்னொரு குண்டும் போடப்பட்டது. 'சென்னை ஓப்பன் டென்னிஸ் இனி சென்னையில் நடப்பதற்கான சாத்தியமில்லை. துபாயிலோ சிங்கப்பூரிலோ நடத்திக் கொள்கிறோம்' என்று போட்டியை நடத்தும் ஐ.எம்.ஜி நிறுவனம் பீடிகை போட்டது.

சோம்தேவ்

# புதிய புன்னகையும்

ச. ந. கண்ணன்

யாரோ கழுத்தைப் பிடித்து நசுக்குவது போன்ற ஒரு நிலையில் இருந்த இந்திய டென்னிஸுக்கு, ஆக்ஸிஜன் ஏற்றியிருக்கிறார் 23 வயதான சோம்தேவ். கடந்த வாரம் முழுக்க சென்னை டென்னிஸ் ரசிகர்கள் சோம்தேவ்மீது பித்துப் பிடித்த நிலையில் இருந்தார்கள். ஒவ்வொரு நாளும் ரசிகர்களுக்கென ஒரு இன்ப அதிர்ச்சியை பாக்கெட்டில் தயாராக வைத்திருந்தார் சோம்தேவ். இறுதிப் போட்டியில் அவர் தோற்றுப்போனபோது யாரும் அதை பெரிய இழப்பாகக் கருதவில்லை.

சென்னை வீரர் ஒருவர் உலக அரங்கில் நுழைவதற்கான கடைக்கால் சென்னை ஓப்பன் போட்டியில் போடப்பட்டிருக்கிறது. சோம்தேவின் முன்னேற்றத்தினால் சென்னை ஓப்பன் போட்டியை சென்னையிலேயே தொடர்ந்து நடத்த ஐ.எம்.ஜி நிறுவனம் முடிவு செய்துள்ளது. லியாண்டர் வந்தபோது இந்திய டென்னிஸ் முகத்தில் ஒரு மலர்ச்சியைக் காணமுடிந்தது. கிட்டதட்ட இருபது ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் ஒரு புதிய புன்னகையை காணமுடிகிறது.



**மேஷம்:** பொருளாதாரக் கஷ்டம் இருக்காது. திருமணம் கைகூடும். புதிய பணி தேடி வரும். கடன் தொல்லை தீரும். வியாபாரத்தில் நல்ல வருவாய் கிட்டும். வழக்கு வெற்றி அளிக்கும். சத்ரு தொல்லை விலகும். செவ்வாய், வெள்ளி, வியாழன், சனி தோறும் நவகிரஹ கோயில் சென்று தீபம் ஏற்றி வழிபட நற்பலன் மிகுதியாகும்.

**ரிஷபம்:** வெளிநாடு செல்லும் யோகம் வந்து சேரும். புதிய வீடு வாங்கும் யோகம் கிட்டும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். கடன் சுமை தீரும். சிலருக்கு வீடு மாற்றம் செய்ய நேரிடும். புதிய தொழில் துவங்க ஏற்ற தருணம். ஆஞ்சநேயரை சனிக் கிழமைதோறும் வழிபட்டு வர சங்கடங் கள் தீரும்.

**மிதுனம்:** எதிலும் கவனமுடன் செயல் படுவது நல்லது. வாகனங்களில் செல்லும் போது உஷார். வாக்குவாதம் பண்ணுவதை தவிர்க்கவும். கொடுக்கல் வாங்கலின் போது எச்சரிக்கை தேவை. செவ்வாய், வெள்ளி, வியாழன் தோறும் நவகிரக வழிபாடு செய்து வர நற்பலன் உண்டா கும்.

**கடகம்:** தடைப்பட்டு வந்த சுபகாரியம் நடக்கும். குடும்ப வாழ்வில் அனுசரணை ஏற்படும். கணவன் / மனைவிக்குள் இருந்து வந்த மனக்கசப்பு விலகும். மகப்பேறு பாக்கியம் கிட்டும். வருவாய் பெருகும். கல்வியில் முன்னேற்றம் கிட்டும். மறைமுக எதிர்ப்புகள் விலகும். வியாபரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற் படும். செவ்வாய், வெள்ளி, சனி தோறும் தீபம் ஏற்றி வழிபட்டு வர நற்பலன் பெரு கும்.

**சிம்மம்:** கைப்பொருள் மீது கவனம் வைக்கவும். உடல் ஆரோக்கியத்தில் கவ னம் தேவை. சிலருக்கு கை, கால்களில் கட்டு போடும் சூழ்நிலை உருவாகும். வாக்குவாதம் தவிர்க்கவும். கொடுக்கல் வாங்கலில் கவனம் தேவை. புதிய தொழில் முயற்சியைச் சற்று தள்ளி வைக்கவும். வியாழன், சனிக் கிழமைகளில் தீபம் ஏற்றி வர சங்கடங்கள் தீரும்.

**கன்னி:** எதையும் ஜெயிக்கக் கூடிய யோகம் உண்டாகும். மனத்தில் நினைத்து வந்த காரியம் கைகூடும். மனக்கசப்பு




தஞ்சை பரத்வாஜ்

# நடக்குமென்பார்; நடக்கும்!

விலகும். பூர்விக வழியில் ஆதாயம் கிட்டும். நண்பர் / உறவினர் மூலம் அனுகூலம் ஏற்படும். கடன் தொல்லை தீரும். புதிய வீடு, மனை, வாங்க ஏற்ற நேரம். சனிக்கிழமைதோறும் சனி பகவானுக்கு தீபம் ஏற்றி வழிபட நற்பலன் கிட்டும்.

**துலாம்:** வீடு, தொழில் மாற்றம் ஏற்படும். உடல் நிலையில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். சுபகாரியப் பேச்சு வார்த்தைகள் பலன் அளிக்கும். உத்தியோகத்தில் வேலைப் பளு குறையும். கடன் தொல்லை தீரும். வழக்கு முடிவுக்கு வரும். சத்ரு தொல்லை தீரும். ராகு, கேது, குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**விருச்சிகம்:** எதிர்பாராத தன யோகம் கிட்டும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். மகான்களின் தரிசனம் கிட்டும். வெளிநாடு செல்லும் யோகம் கிட்டும். தெய்வப் பிரார்த்தனைகள் நிறைவேறும். வீடு வாங்கும் யோகம் வந்து சேரும். குரு, சனி வழிபாடு செய்து வர நற்பலன் பெருகும்.

**தனுசு:** திருமணயோகம் கைகூடும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். நீண்ட நாள் முடிவுபெறாமல் இருந்து வந்த வழக்கு வெற்றி பெறும். உடல் ஆரோக்கியம் சீராகும். குலதெய்வப் பிரார்த்தனை நிறைவேறும். வாக்குவாதம் கூடாது. யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது. ராகு, கேது வழிபாடு நற்பலன் அளிக்கும்.

**மகரம்:** பிரச்னைகளிலிருந்து விடுபடும் காலம். மனசஞ்சலம் தீரும். பொருள் வரவு உண்டாகும். திருமணம், தடை விலகி கைகூடும். வழக்கு வெற்றி அளிக்கும். கணவன்-மனைவிக்குள் இருந்து வந்த மனக்கசப்பு விலகி குடும்பம் ஒற்றுமையுடன் செயல்படும். நினைத்த காரியம் நிறைவேறும். செலவுகள் சுபமானதாக இருக்கும். ராகு, கேது, குரு, சனியை வழிபட்டு வர நற்பலன் உண்டாகும்.

**கும்பம்:** திடீர் பிரயாணம் வந்து சேரும். மனக்கஷ்டம் விலகும். சுபகாரியம் கைகூடும். வெளிநாடு செல்லும் யோகம் சித்திக்கும். புதிய பணி தேடி வரும். கடன் பிரச்னை தீரும். வழக்கு வெற்றி அளிக்கும். மகப்பேறு பாக்கியம் கிட்டும். உடல் ஆரோக்கியம் நன்றக இருக்கும். நீண்ட நாள் முடிவு பெறாமல் இருந்து வந்த சிக்கல் தீரும். குரு, சனி வழிபாடு செய்து வர சங்கடங்கள் விலகும்.

**மீனம்:** எதையும் வெற்றிப் பாதையில் கொண்டு செல்லும் உங்களுக்கு, பொருள் வரவு தேடிவரும். பணியில் நற்பெயரும் கிட்டும். நண்பர், உறவினர் மூலம் அனுகூலம் ஏற்படும். கடன் தொல்லை தீரும். பூர்விக வழியில் ஆதாயம் கிட்டும். மனதுக்குப் பிடித்த இனிய நிகழ்ச்சிகள் நடக்கும். ராகு, கேதுவை வழிபட்டு வர நற்பலன் உண்டாகும்.

**18.01.09 முதல் 24.01.09 வரை**

சம்பள உயர்வு எல்லாம் அரசு ஊழி யர் களுக்கு மட்டும்தான் என்று தவ றாக நினைத்துவிடாதீர்கள். அண்மையில் ஜனாதிபதி பிரதீபா பாட்டீல், தனக்கும், துணை ஜனாதிபதிக்கும் சம்பள உயர்வு அளிக்கும் சட்டத்தில் கையெழுத்துப் போட்டிருக்கிறார். அதன்படி, ஜனாதிபதி யின் மாதச் சம்பளம் 50 ஆயிரம் ரூபாயிலிருந்து ஒன்றரை லட்சமாகி விட்டது. துணை ஜனாதிபதி இனி 40 ஆயிரத்துக்குப் பதிலாக ஒன்ணே கால் லட்சம் ரூபாய் மாதச் சம்பளம் பெறு வார். இந்திய அரசியலமைப்புச் சட்டம் அமலுக்கு வந்தபோது, ஜனாதிபதிக்கு மாதச் சம்பளம் பத்தாயிரம் ரூபாயாக நிர்ணயிக்கப்பட்டது. அது 98-ஆம் வருடம் 50 ஆயிரமாக உயர்ந்தது. அது தவிர ஜனாதி பதியின் செலவுகளுக்காக ஆண்டுக்கு 22.5 கோடி ரூபாய் பட்ஜெட் ஒதுக்கப்படுகிறது.

பாராளுமன்றத்தின் மீதான தீவிர வாதத் தாக்குதல் வழக்கில், தூக்குத் தண் டனை விதிக்கப்பட்ட அஃப்சல் குருவின் தண்டனை நிறைவேற்றப்படாதது இன்ன மும் சர்ச்சைக்குரியதாக இருக்கும் சூழ் நிலையில், இது விஷய மாக காங்கிரஸ் மௌனம் சாதித்து வருகிறது. அண்மை யில் ஔரங்கபாத் வந்திருந்த முன்னாள் மத்திய உள்துறை அமைச்சர் சிவராஜ் பாட்டீல் இதுகுறித்து வாய் திறந்திருக் கிறார். அவரது கருத்து, ''ஏற்கெனவே, ஜனாதிபதி யிடம் தூக்கு தண்டனை விதிக்கப்பட்டவர்கள் 35 பேர்களின் கருணை மனுக் கள் முடிவு எடுக்கப்படாமல் கிடப்பில் இருக்கும்போது, அஃப்சல் குருவின் தூக்குத் தண்டனையை மட்டும் பா.ஜ.க., அரசியலாக்குவது தேவையற் றது'' என்பது. கிரிமினல் குற்றங்களும், தீவிரவாதத் தாக்குதலும் ஒன்றா? என்று பா.ஜ.க. கேள்வி எழுப்பி யுள்ளது.


அப்சல் குரு


ரவிசங்கர் பிரசாத்

பாராளுமன்றத் தேர் தலில் காங்கிரஸ்-சமாஜ் வாடி கட்சி கூட்டணி இருக் குமா? என்பது கேள்விக் குறியாகவே இருக்கிறது. காரணம் உ.பி. காங்கிரஸ் காரியக் கமிட்டி தலை வரான ரீட்டா பகுகுணா, அண்மையில் பல்வேறு மாவட்ட காங்கிரஸ் தலை வர்களுக்கும் ஒரு சுற் றறிக்கை அனுப்பியிருக்

கிறார். அதில் மாவட்டத் தலைவர்கள் தங்கள் மாவட்டத்தின் அனைத்து எம்.பி. தொகுதிகளுக்கும் காங்கிரஸ் கட்சியின் சார்பில் போட்டியிட வேட்பாளர்களின் பெயர்களைச் சிபாரிசு செய்யும்படி கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறார்கள். அதன்படி பார்த்தால், உ.பி.யின் 80 பாராளுமன்றத் தொகுதிகளுக்கும் வேட்பாளர்களைத் தயார் செய்கிறது காங்கிரஸ்.

**சி**ல வாரங்களுக்கு முன்பு, டெல்லியில் உள்ள பா.ஜ.க. தலைமை அலுவலகத்தின் பாதுகாப்புப் பெட்டகத்தில் வைக்கப்பட்டிருந்த, சுமார் இரண்டரை கோடி ரூபாய் மாயமாக மறைந்து



* பிரதீபா பாட்டீல்

# ஜனாதிபதிக்கு சம்பள உயர்வு!

விட்டதாக வெளியான செய்தி, டெல்லியைப் பெரும் பரபரப்பில் ஆழ்த்தியது. விஷயத்தைப் போலீசில் புகார் செய்யாமல், தனியார் துப்பறியும் நிறுவனம் மூலமாக விசாரிக்கப்படுகிறது என்றுகூட ஒரு தகவல். இப்போது முழுப் பூசணிக்காயை சோற்றுக்குள் மறைத்த கதையாக, ''அப்படி ஒரு விஷயம் நடக்கவே இல்லை; மீடியாக்காரர்கள், இல்லாததை ஊதிப் பெரிசாக்கிவிட்டார்கள்'' என்று அறிக்கை விட்டிருக்கிறார் அக்கட்சியின் ரவிசங்கர் பிரசாத். ஹேராம்!

**ச**மீபத்திய சட்டசபைத் தேர்தல் வெற்றியால் காங்கிரஸ் கட்சி சந்தோஷமாக பாராளுமன்றத் தேர்தலுக்குத் தயாராகி வரும் வேளையில், தேசிய கிரைக் ரெகார்டு பீரோ வெளியிட்டுள்ள புள்ளி விவரம், காங்கிரஸ் கட்சியைத் தர்ம சங்கடத்தில் ஆழ்த்தியுள்ளது. 2007ஆம் ஆண்டில் மட்டும் 16 ஆயிரத்து 600 விவசாயிகள் தற்கொலை செய்துகொண்டிருக்கிறார்கள்; அதாவது சராசரியாக தினமும் 46 பேர். 1997 முதல் கடன் தொல்லை உள்ளிட்ட காரணங்களுக்காக தற்கொலை செய்துகொண்ட விவசாயிகள் எண்ணிக்கை ஒரு லட்சத்து 82 ஆயிரத்து 936. நம் விவசாயிகளுக்கு விடிவு காலம் எப்போதோ?

- கௌதம்ராம்

**எப்போதும் அடுத்தவங்களை கலாய்க்கும் லொள்ளு சபா குழுவினர் அவங்களுக்குள்ளே குமுறிக்கிட்டா கொண்டாட்டம்தானே! அந்த உள்குத்து லொள்ளுயுத்தம் இப்ப உங்க பார்வைக்கு...**

''இருபத்தைந்து வருடங்களாக நான் சினிமாவில் நடிச்சுக்கிட்டிருந்தாலும் என்னை மக்களிடம் கொண்டு சென்றது லொள்ளு சபாதான். லொள்ளு சபா ஆரம்பத்திலிருந்து தொடர்ந்து நடிக்கும் ஒரே ஆக்டர் நான்தான்'' என்று பெருமையாக சாமிநாதன் பில்டப் செய்து கொண்டிருந்தபோது, ''சரி உருப்படியா நீ என்னதான் பண்ணியிருக்க?'' என்று ஒரு குரல் வந்தது. திரும்பிப் பார்த்தால் மாறன். ஜிகுஜிகு சட்டையுடனும், பெல்ஸ் பேண்டுடனும் வந்துகொண்டிருந்தார். ''எம்.ஜி.ஆர்., சிவாஜி வேஷங்களில் நான்தான் நடிப்பேன்னு நீ பண்ணுற லொள்ளு பொறுக்கமுடியாமதான் ஒருத்தன் உனக்கு வெடிகுண்டு பார்சல் அனுப்பினான். ஆனாலும் நீ பில்டப் பண்றதை நிறுத்தல'' என்றதும் சபா களை கட்ட ஆரம்பித்தது.

''வெடிகுண்டு பார்சல் அனுப்பினா பயந்துடுவோமா, நான் நம்ம வாத்தியார் சிஷ்யனில்லையா?'' என்று எம்.ஜி.ஆர். பாணியில் கையை



மூக்கின் மேல் வைத்து ஒரு சுழற்றுச் சுழட்டிய சாமிநாதன், ''எங்கள் லொள்ளு சபாவுக்கு அமெரிக்கா, கனடா, என பல நாடுகளில் வரவேற்பு உள்ளது'' என்றார். ''விட்டா ஜப்பான்ல ஜாக்கிசான் கூப்பிட்டாக, அமெரிக்காவுல ஒபாமா கூப்பிட்டாகன்னு கலர்கலரா ரீல் விடுவியே'' என்று 'பிட்'டைப் போட்டார் மாறன்.

''**பா**ட்ஷா பாரு, பாட்ஷா பாரு லொள்ளு சபாவைக் கலக்கும் ஜீவா பாரு என்று எஃபெக்ட்டோடு வந்தார் லொள்ளு சபாவில் ரஜினியாக நடிக்கும் ஜீவா.

''ரஜினி சார் ஸ்டைல் சின்ன வயசிலேயே மனசுல பதிஞ்ச விஷயம். அன்னையிலிருந்து இன்னைக்கு வரைக்கும் குறைஞ்சது ஒரு நாளைக்கு ஒரு ரஜினி படமாவது பார்க்காம தூங்கமாட்டேன்'' என்றார்.

''இவர் தொல்லை பொறுக்கமுடியாமதான் சிவாஜியில ரஜினி சார் ஹேர் ஸ்டைலை மாத்தினாரு, எந்திரன்ல கெட்டப்பையே மாத்தப்போறாரு, இருந்தாலும் ஜீவா திருந்தறாப்போல இல்லை'' என்று ஜீவாவை மொக்கையாக்கினார் சாமிநாதன்.

''**மீ**ட் மிஸ் சுவேதா.




# இளைச்சவனுக்கு லொள்ளு!

இந்நிகழ்ச்சியின் மேற்பார் வையாளரும் எக்ஸிக்யூடிவ் தயாரிப்பாளருமான ராம்பாலா:

"ஹாலிவுட்டில் ஒரு படம் வெற்றிபெற்றால் அதே படத் தைக் கிண்டல் செய்து படம் எடுத்து சிறிய திரையரங்குகளில் வெளியிடுவார்கள். அதே பாணி யைத்தான் லொள்ளு சபாவில் பின்பற்றுகிறோம். இது யார் மனத்தையும் காயப்படுத்தும் நிகழ்ச்சி அல்ல. பல்வேறு ஹீரோக் களின் ரசிகர்கள் இந்நிகழ்ச் சியை நடத்தக்கூடாது என்று ஆரம்பித்த புதிதில் மிரட்டியது உண்மைதான். காலப்போக்கில், இது யாரை யும் புண்படுத்தும் நிகழ்ச்சி யல்ல என்று புரிந்துகொண்ட பிறகு மிரட்டல்கள் எதுவும் எங்களுக்கு வரவில்லை. தற் சமயம் பிரேமானந்த், முருகன் என்ற இரு இயக்குநர்கள் லொள்ளு சபாவை இயக்கு கிறார்கள். லொள்ளு சபாவில் நடிப்பது அவ்வளவு சுலபமல்ல. மற்ற சீரியல்களில் காமெடி செய் வதைவிட அதிகமான திறனும், கூர்ந்துநோக்கும் ஆற்றலும் லொள்ளு சபாவில் நடிப்பவர் களுக்குத் தேவை. இதுபோன்ற திறமையான நடிகர்கள் எங் களிடம் இருப்பதால்தான், இந்த காமெடி நிகழ்ச்சியை, ஆறு ஆண்டுகளுக்கு மேலாக வெற்றி கரமாக நடத்தமுடிகிறது."



* ராம்பாலா

ரொம்ப வருஷமா லொள்ளு சபாவுல நடிக்கிறாங்க. ஆனா, இன்னைக்கு வரைக்கும் சரியா நடிக்கமாட்டேங்கறாங்க" என்று சுவேதாவை வித்தியாசமாக அறிமுகம் செய்து வைத்தார் மாறன்.

"மாறன் ஸார் கொஞ்சம் அடங்குங்க. அந்தக் கால சரோஜாதேவி முதல் இந்தக் கால தமன்னா வரைக்கும் எல்லா ஹீரோயினாவும் லொள்ளு சபாவுல பண்ணியிருக்கேன் தெரியுமா? கொழுத்தவன் கொள்ளு சாப்பிடுவான்; இளச்சவன் எள்ளு சாப்பிடுவான்- இது பழமொழி. இப்பவெல்லாம் இளச்சவனுக்கு லொள்ளுதான்னு சீரியஸானார் அம்மணி.

"அந்தக் காலத்தில் ஹீரோயின்களெல்லாம் டூ - பீஸ் போட்டு நடிக்க ரொம்பத் தயங்குவாங்க. இன்னைக்கு ஹீரோயின்கள் டூ-பீஸ் போட்டு நடிக்க தயங்குறதில்லை. ஆனா, காமெடியா நடிக்கத்தான் ரொம்ப யோசிக்கிறாங்க. நம்ம சுவேதா காமெடியை லொள்ளு சபாவுல வாரி வழங்குவாங்க" என்று வாயாரப் பாராட்டுகிறார் மாறன்.

இவர்கள் இப்படி வம்பு செய்து கொண்டிருக்க, "சரி, சரி உங்களுக்குள்ளேயே கலாய்த்தது போதும், வந்து கேமரா முன்னாடி கலாய்ங்க" என்று நிகழ்ச்சியின் எக்ஸிக்யூடிவ் ப்ரொட்யூசர் ராம்பாலா ஃபிரேக் போட்டு டீமை அழைத்துச் சென்றார்.

கிளம்பும் சமயத்தில் ஜீவா,
"பஞ்ச் டயலாக்னா நம்ம ரஜினி;
நச் பத்திரிக்கைன்னா நம்ம கல்கி"
- என்று பஞ்ச் வைத்துவிட்டுச் சென்றார்.

**- ராகவ்குமார்**



* காளி சிலை வடிவமைப்பில்...

# மரபின் புனைவியர்!

சென்னை சங்கமத்தை முன்னிட்டு, சென்னையில் தமிழக பாரம்பரியக் கலையின் வடிவங்கள் சிலைகளாக வைக்கப்பட்டு வருகிறது. இதற்காக, ஓவியரும், சிற்பியும், சென்னை கவின் கலைக் கல்லூரி முதல்வருமான சந்ரு என்கிற சந்திரசேகரன் தலைமையில், இருபது கலைஞர்கள் ஒன்றிணைந்து சிலைகளை வடிவமைத்து வருகின்றனர். சமீபத்தில் 'மக்கள் தொலைக்காட்சி'யும் கவின்கலையில் மக்கள் சிறந்த சேவையாற்றியதற்காக சந்ருவை தேர்ந்தெடுத்துக் கௌரவப்படுத்தியது. சந்ருவைச் சந்தித்தபோது...

**தமிழகத்தின் கலையை வெளிப்படுத்தும் இச்சிலைகளை நிறுவுவதன் அவசியம் என்ன?**

''பழங்கலைகளில் ஈடுபடும் கலைஞர்களுக்கான சமூக அங்கீகாரம் இது. கொஞ்சம் தெம்பூட்டும் முயற்சியும்கூட. கலைஞர்களை, கலையை சிலை வைத்துக் கௌரவிக்கும் இம்முறை மேல்நாடுகளில் ஏற்கெனவே பிரசித்தம்.''

**சென்னை சங்கமத்துக்கு அப்படியென்ன அவசரமாய் சிலைகள் நிறுவ ஏற்பாடு?**

''இச்சிலைகள் சென்னை சங்கமத்திற்கானது அல்ல. சிங்கார சென்னைக்கான மாநகராட்சியின் பணிகளுள்







சிலைகள் நிறுவுவதும் ஒன்று. சங்கமத்துக்கு சென்னையில் கலைஞர்கள் கூடுவதால், அந்தச் சூழலில் இச் சிலைகள் இருந்தால் அவர்களுக்குப் பெருமையென்பதால் சங்கமத்தின் விழாக் காலத்தைப் பயன்படுத்திக் கொண்டோம். அவ்வளவுதான்.''

**சிலம்பாட்டம், களரி, தெருக்கூத்து, பொய்க்கால் குதிரை போன்ற கிராமியக் கலை வடிவங்களை, சிலைகளாக தற்காலிகமாய் சென்னையில் நிறுவுவதால் இக் கலைகள் வளர்ந்துவிடுமா?**

''சிலைகள் சென்னையில் நிரந்தரமாகவே இருக்கும். ஒவ்வொரு சிலைக்குக் கீழேயும் அந்தக் கலைப் பற்றிய சிறு குறிப்பு உண்டு. இப் பணி மக்கள் மத்தியில் அந்தக் கலை மீதான மரியாதையை உண்டு பண்ணும். மற்றபடி கலை வளர்வது என்பதெல்லாம் அதனதன் இயல்பில் உள்ளது. சிலை நிறுவுதல் சென்னை உள்ளிட்ட பிற நகரங்களிலிருக்கும் பூங்காக்களிலும் வைக்க முடிவாகியுள்ளது. நகரம் என்பது



* முதல்வர் சந்ரு



* மரப்பாச்சி பொம்மை மாடல்

* சிலம்பாட்டம்



# சென்னை உலா



மேடை போல. இம்முயற்சிகள் கலையை மேடையேற்றுவதற்கு ஒப்பானது.''

**அது சரி... அக்காலத்திய காதணி, பாம்படம் மற்றும், மரப்பாச்சி பொம்மை இவைகளை சிலைகளாக்குவது எதற்கு?**

''கடையில் விற்கும்போது நடராஜர் ரசனைக்குரிய சிலை. கோவிலில் இருக்கும் போது அது கடவுள். அது எப்படி இரண்டு மாக உள்ளதோ அப்படித்தான் பாம்பட மும். அது காதணி மட்டுமல்ல - கலை வடிவமும்கூட. மாபெரும் கலையை ஒரு இனக்குழு காதில் மாட்டிக்கொண்டிருந் தது. கலைக்கு அடிப்படையான வட்டம், சதுரம், முக்கோணம் இம்மூன்றும் அதில் அடங்கியிருக்கும். சிவலிங்கம் எப்படி ஒரு குறியீடோ அதுபோல பாம்படம் நமது பேஷனின் குறியீடு. அதுபோலவே மரப் பாச்சி. பாச்சி என்று குழந்தைகள் தாயின் மார்பகத்தைச் சொல்லும். பாச்சி என்றால் பாலைப் பாய்ச்சுவது என்று பொருள். குழந்தைகள் மரத்தாலான பொம்மையை வைத்துத் தனக்குத்தானே பேசிக்கொண்டு தன்னோடு இருக்கும் இச்சமூகத்தை தனக்குள் பதியவைத் துக் கொள்கிறது. மரப் பொம்மை குழந்தைக்கு சமூக ஞானத்தைப் பாய்ச்சுவதால் அதற்கு மரப்பாச்சி என்ற புனைப்பெயர். இந்த பொம்மை நமது மர பின் பொக்கிஷமில் லையா? மரபின் அடையாளத்தை எப் படியாவது பாதுகாக்க வேண்டும்.''

**பைபர்கிளாஸிலான இச்சிலைகளை உங்கள் தலைமையில் உருவாக்கிய மாணவர்களுக்கு இதனால் என்ன பயன்?**

''நவீன கலை மாணவர்களுக்கு மரபு சார்ந்த கலையறிவில் பற்றாக்குறை உண்டு என்ற எண்ணம் தகர்க்கப்பட்டுள்ளது. மாடர்ன் ஆர்ட் ஸ்டூடண்ட்ஸ் எதையாவது செய்வார்கள் என்ற ஐயத்தை உடைத்து, மரபுவழி கலை ஞானத்தை வெளிப்படுத்த மிகச் சவாலான பயிற்சி இது. ஒரு தையல் கடையில் ஒருவன் துணி வெட்டுவான். இன்னொருவன் தைப்பான், ஒருவன் பட்டன், மற்றவன் ஓவர்லாக். ஆனால் கடை உரிமையாளரின் பெயர்தான் முன் னால் வரும். அதுபோல நான் மேற் பார்வையாளன் என்பதால் முன்னிலைப் படுத்தப்படுகிறேன். எல்லாப் புகழும் எனது மாணவர்களுக்கும் ஆசிரியர் வெங்கட்ராஜாவுக்கும்தான்.''

**சிலைகளால் சென்னை அழகாகுமா?**

''கார்ப்பரேஷனிடம் கேட்க வேண்டிய கேள்வியை கலைஞனிடம் கேட்கிறீர்கள்.

**இன்று கலையின் போக்கு என்ன?**

கேலரி தரகர்களும், விமர்சகர்களும், வாங்கு பவர்களும் சேர்ந்துதான் இங்கு கலைஞர்களின் மூளையை இயக்குகிறார் கள். அலங்காரப் பொரு ளாக, வியாபாரப் பொரு ளாக, கலை மாறிப் போயிருக்கிறது. இப் படி மாறியதற்கு இவர் கள்தான் பொறுப்பு.''

**- அமிர்தா**

✱ பாம்படம்



திருமண வெள்ளிவிழா, பொன்விழா கண்ட தம்பதிகள் முந்தைய தலைமுறைகளில் ஏராளமாக இருந்தார்கள். ஆனால், இன்றைக்கு நாம் பார்க்கும் இளைய தலைமுறையினர் திருமணம் என்பதைப் பார்க்கிற கோணமே வேறாக இருக்கிறது.

கணவனுக்கும், மனைவிக்கும் ஒத்துப் போகவில்லை என்றால், உடனே, 'மியூச்சுவல் கன்சன்ட்டில் பிரிந்துவிடலாமா?' என்று நினைக்க ஆரம்பிக்கிறார்கள். ஒன்றைப் புரிந்துகொள்ளுங்கள். கணவன்-மனைவி இருவருமே விவாகரத்துச் செய்துகொள்ளலாம் என்று முடிவெடுத்து, குடும்ப கோர்ட்டில் விண்ணப்பித்தால், உடனே நீதிபதி இருவரையும் கூப்பிட்டு, ''என்ன? உங்களுக்குள் மன ஒற்றுமை இல்லையா? சேர்ந்து வாழ விருப்பமில்லையா? சரி சரி! இந்தா பிடியுங்கள்!'' என்று விவாகரத்து உத்தரவைக் கையில் கொடுத்து அனுப்பி வைத்துவிடமாட்டார்.

முதலில் ஒரு ஆறு மாதத்துக்கு இருவரும் தனித்தனியாகப் பிரிந்து வசிக்கவேண்டும். பிறகு இன்னொரு ஆறு மாதகாலம் அவர்கள் எடுத்த விவாகரத்து முடிவினை மறுபரிசிலனை செய்ய அவகாசம் உண்டு. எதற்காக? குடும்பம் நடத்திய இருவரும், தனித்தனியே வசிக்கும்போது, ஒருவரையொருவர் மிஸ் பண்ணுவார்கள். போட்ட சண்டைகளின் சூடு குறையும். சேர்ந்து வாழ்வது; பிரிந்து வாழ்வது இரண்டிலும் இருக்கும் நல்லது, கெட்டதுகளை அலசிப் பார்ப்பார்கள். இந்தக் காலகட்டத்தில் மனத்தெளிவு ஏற்படவும் வாய்ப்புண்டு. ஆனால், எவ்வளவு அவகாசம் இருந்து யோசித்தாலும் 'விவாகரத்துதான் ஒரே தீர்வு' என்று பிடிவாதமாக இருக்கும் தம்பதிகளும் உண்டு.

**- டாக்டர் விஜய் நாகசாமி -**

மீண்டும் ராஜேஷ்-ரம்யா கதைக்கு வருவோம். குடும்ப கோர்ட் விவகாரத்து வழங்கித் தீர்ப்பளித்தபோதிலும், ராஜேஷ், ரம்யாவை 'ஒரு காஃபி சாப்பிடலாமா?' என்று கேட்க, 'டைவோர்ஸ் ஆகிவிட்டது! இப்போது எதற்காகச் சேர்ந்து காஃபி எல்லாம்?' என்று ஒரு பக்கம் ரம்யாவின் மனத்தில் தோன்றினாலும், மறுப்பது நாகரிகமில்லை என்று சம்மதித்தாள். இருவரும் அருகில் இருந்த காஃபி ஷாப்புக்குள் நுழைந்தார்கள். ரம்யாவுக்குப் பிடித்த 'கப்புசினோ' காஃபி இரண்டு ஆர்டர் செய்தான். அவள் 'தேங்க்ஸ்' என்றாள்.

அவளுடைய அமெரிக்க அனுபவம், ஆஃபீஸ் வேலை, பெற்றோர் என்று பல்வேறு விஷயங்கள் பற்றியும் கேட்டான்

# “மிஸ் யூ மேம்

ராஜேஷ். கேட்ட கேள்விகளுக்கெல்லாம் அவள் பதில் சொன்னதுடன், அவனுடைய உடல் நலம் குன்றிய அம்மா, குடும்பத்தில் மற்றவர்கள், அவனுடைய ஆஃபீஸ் இன்ன பிற விஷங்கள் பற்றிப் பேசினாள். இருவருமே அவர்கள் சேர்ந்து நடத்திய வாழ்க்கை பற்றிப் பேசிக்கொள்ளாமல் கவனமாகத் தவிர்த்தார்கள்.

அடுத்த சில நாட்களுக்கு இரண்டு பேர் மணங்களையும் கலவையான உணர்வுகள் ஆக்கிரமித்தன. 'நல்லவன்தான்; அவசரப்பட்டுவிட்டோமோ!' என்ற எண்ணம் ஒரு பக்கம். இன்னொரு பக்கம் 'சேர்ந்து வாழ்ந்திருந்தால், உடல் நலமில்

லாத அம்மாவைப் பார்த்துக் கொள்ள ஆறு மாசம் ஆஃபீசுக்கு லீவு போடச் சொல்லியிருப்பானோ? அல்லது வேலையை ராஜினாமா செய்யச் சொல்லியோ இருப் பானோ?' என இரு விதமான எண்ணங்கள் தோன்றின ரம்யாவுக்கு.

இரண்டு வாரங்கள் கழித்து, அடுத்தடுத்து நடந்த சில காஃபி ஷாப் சந்திப்புகளிலும் இரண்டு பேரும் தெரிந்த நண்பர்கள் போலத்தான் பேசிக்கொண்



...ரில் இடம் பெற்றுள்ள மாடல் ...க்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை!

# ...மி அகெய்ன்?”

டார்கள். கடந்தகால வாழ்க்கை பற்றிப் பேசினால், ஒருவர் மீது ஒருவர் குற்றம் சுமத்தி, வாக்குவாதமாகி இப்போது துளிர்த் திருக்கும் நட்பான உறவில் விரிசலை ஏற்படுத்திவிடக்கூடும் என்று முன்னெச் சரிக்கையாகத் தவிர்த்தனர்.

**இ**ந்தக் கட்டத்தில் என்னை வந்து சந்தித்த ராஜேஷ், 'விவாகரத்து என் விருப்ப மல்ல' என்றான். இரண்டாவது சந்திப்பின் போது ரம்யாவையும் வரச்சொன்னான். ரம்யாவுக்கும் விவாகரத்தில் முழுச் சம்மத மில்லை என்பது புரிந்தது. மனைவி விவா கரத்து வேண்டும் என்று பிடிவாதமாக இருக்கிறபோது, நீ இல்லாமல் என்னால் இருக்கமுடியாது! 'நாம் ஒன்றாக வாழலாம்' என்று சமாதானம் பேச ராஜேஷின் ஆண் ஈகோ இடம் தரவில்லை. அதுவும் இல்லாமல், அமெரிக்காவில் ரம்யா இருந்த சமயத்தில், அவளுடைய அமெரிக்க உச்சரிப்பு பேச்சும் ஒருவித அன்னியத்தன்மையை ஏற்படுத்தி யது.

ரம்யாவுக்கோ தான் விவாகரத்துப் பற்றிப் பேசியதும், சின்னக் குழந்தை ஆசையாக ஐஸ்கிரீம் கேட்டால் வாங்கிக் கொடுப்பது போல, 'விவாகரத்துதானே! ஓகே! வாங்கிட்டாப் போச்சு' என்கிற ரீதியில் அவன் நடந்துகொண்டதை அவ ளால் ஜீரணித்துக் கொள்ள முடியவில்லை. முன் வைத்த காலைப் பின் வைக்க அவளுடைய ஈகோவும் இடம் தரவில்லை!

விவாகரத்து ஆனபின், ராஜேஷ் தன் ஈகோவைச் சற்றே ஓரம் கட்டிவிட்டு, கீழே இறங்கி வந்து காஃபி சாப்பிட அழைத்தவிதம் பாராட்டுக்குரியது. அந்த முதல் படியைச் சரியானபடி

எடுத்துக்கொண்டு, ஒத்துழைத்த ரம்யாவும் பாராட்டுக்குரியவளே! இன்றைக்கு மனித வாழ்க்கை இயந்திர கதியாக இயங்கிக் கொண்டிருக்கிறது. இளம்வயதிலேயே பொறுப்பான பதவி, ஏராளமான சம்பளம், இதர வசதிகளுடன் வேலைப் பளு, மன அழுத்தம் இவையும் இணைகின்றன. இதனால் நினைத்தபடி ஒரு விஷயம் நடக்காதபோது, மனத்தில் உடனடியாக எரிச்சல் ஏற்படுகிறது; சகிப்புத்தன்மை குறைந்து அட்ஜஸ்ட் செய்துகொண்டு போகிற மனப் பக்குவமும் இல்லாமல் போய்விடுகிறது. ஆபீஸில் ஆய்ந்து, ஆராய்ந்து லட்சம் கோடிகளுக்கு முடிவெடுப்பவர்கள்கூட, சொந்த வாழ்க்கையின் முக்கிய முடிவு களை அறிவுபூர்வமாக எடுக்காமல் உணர்ச்சிபூர்வமாக எடுக்கும் சூழ்நிலை ஏற்படுகிறது!




**இன்று குடும்பப் பிரச்னைக்கான தீர்வாக விவாகரத்து மாறியுள்ளதால், பலரும் அதைச் சட்டென்று தேர்வு செய்ய தயங்குவதில்லை!**

**நா**ன் ரம்யா-ராஜேஷிடம் சொன்னேன்: ''உங்களுடைய பெற்றோர்களுக்குக்கூட கருத்துவேறுபாடுகள், பிரச்னைகள் வந்திருக்கும்; ஆனால், அவர்கள் விவாகரத்தை ஒரு தீர்வாக நினைக்கவில்லை. அவர்களுக்குச் சகிப்புத்தன்மையும், அடுத்தவரை அனுசரித்துக்கொண்டு போகிற மனப்பக்குவமும் நிறைய இருந்தது. மேலும், அந்தக் காலத்தில் விவாகரத்துச் செய்துகொண்டவர்களுக்குச் சமூக அங்கீகாரம் கிடைப்பது மிகக் கடினமாக இருந்தது. ஆனால், இன்று, குடும்பப் பிரச்னைக்கான தீர்வாக விவாகரத்து மாறியுள்ளதால் பலரும் அதைச் சட்டென்று தேர்வு செய்யத் தயங்குவதில்லை.

'நீங்கள் உங்களுடைய விவாகரத்துக் குறித்து குற்றஉணர்ச்சி கொள்ளத் தேவை இல்லை. சொல்லப்போனால், அதுதான் உங்களை நீங்களே அறிய உதவியது!' என்று நம்பிக்கை ஊட்டினேன். அதற்குப் பலன் கிடைத்தது.

இரண்டு குடும்பங்களின் முக்கியமானவர்கள் மட்டும் பங்கேற்க, ராஜேஷ்-ரம்யா திருமணம் மிகவும் எளிமையாக நடந்து முடிந்தது. அண்மையில் அவர்கள் தங்கள் நான்காம் ஆண்டு திருமண நாளைக் கொண்டாடினார்கள்!

**(அழைப்பு தொடரும்)**

**எழுத்து வடிவம்: எஸ். சந்திரமௌலி**

படம்: **ஸ்ரீஹரி**



# ஆத்மசாந்த அனுபவம்

நமக்கு நல்லது செய்வதாக நினைத்துப் பணமும், புகழும், இந்திரிய சுகங்களும் தேடிப் போவது மனசில் கரியை ஏற்றுகிற காரியம்தான். பரமாத்ம ஸ்வரூபமான உலகுக்குச் செய்கிற நல்லதேதான் உண்மையில் நமக்கும் நல்லது; ஆத்ம க்ஷேமம் அதுவே. இதை நம்முடைய உள் மனமே அறிந்திருக்கிறது. அதனால்தான் தனக்கென்று செய்து கொள்கிற சௌகரியங்களில் கூட ஏற்படாத நிறைவு, பிறருக்காக அசௌகரியப்படும்போது ஏற்படுகிறது.

உலகம் பரமாத்ம ஸ்வரூபம் என்றால் நாமும் அதே பரமாத்ம ஸ்வரூபம்தான். மனசு என்கிற கண்ணாடியை எடுத்துவிட்டு, அந்த பரமாத்ம ஸ்வரூபமே நாம் என்பதை அனுபவித்துப் பார்க்க வேண்டும். இதுதான் தியானம் என்பது. நாம் செய்கிற இத்தனை காரியங்களும், கடைசியில் ஒரு காரியமுமில்லாத அந்த ஆத்ம தியானத்தில்தான் நம்மைச் சேர்க்க வேண்டும். நான் எத்தனை எத்தனையோ அனுஷ்டானங்களைச் சொல்கிறேனே, அவற்றின் முடிவு இதுவே.

காரியங்களில் நமக்குப் பலவிதமான சந்தோஷங்கள் உண்டானாலும், காரியமில்லாத தூக்கத்திலிருக்கிற பெரிய சாந்தி இவற்றில் இல்லை. ஒரு நாள் தூங்காவிட்டால் எவ்வளவு கஷ்டப்படுகிறோம்? தூக்கத்தில் அப்படிப்பட்ட சௌக்கியம் இருக்கிறது! இதிலிருந்தே காரியம் இல்லாமலிருப்பதுதான் பரமசௌக்கியம் என்று தெரிகிறது. அப்படிக் காரியமே இல்லாமல் தன் உண்மை நிலையான பரமாத்ம ஸ்வரூபத்தில் அமிழ்ந்திருப்பதுதான் தியானம்.

தூக்கத்திலே 'நாம் சௌக்கியமாயிருக்கிறோம்' என்றும் தெரியவில்லை. தூக்கம் கலைந்த பின்தான், தூக்கத்திலே சுகமாயிருந்திருப்பதாகத் தெரிகிறது. இப்படியின்றி, பேரானந்தமாக இருக்கிறோம் என்ற பிரக்ஞையுடன் சாந்தமாக இருப்பதுதான் தியானயோகத்தின் முடிவான சமாதி நிலை. உள்ளுக்குள்ளே அப்படிக் காரியமே இல்லாமல் இருக்கப் பழக்கிக்கொண்டு விட்டால், பிறகு வெளியில் எத்தனை காரியம் செய்தாலும் கூட ஆத்மசாந்த அனுபவம் குலையாது.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

**அருள்வாக்கு**




...கடகடவென்று கமலை உருளை மாதிரி அந்த உருவம் உருண்டோடிற்று. ஒரே ஒரு விநாடிதான். கடைசியில் அது நடந்தே விட்டது. புத்திக்குச் சங்கதி போய் தலைநிமிர்வதற்குள் ஓடிற்று. அந்த அசைவைப் படிப்பதற்குள் பாய்ந்தோடி விட்டது.

ஆடி மாதக் காற்றின் கிளையசைவு மாதிரி ஒரே ஒரு வீச்சு! சடசடவென்று ஒரு வீச்சு. அவ்வளவுதான்! புத்தி எப்படிப் புரிந்து கொண்டதோ! 'என் முகத்தை யாரோ பார்த்து விட்டார்கள்' நெஞ்சில் அந்த நிழலசைவு இன்னும் ஆடிக் கொண்டுதான் இருக்கிறது.

இனி அதையும் சேர்த்து சுமந்து கொண்டு நடக்க வேண்டியதுதான். அதற்குப் பிற்பாடுதான் மனம் இடறி விழுந்து விட்டது. அது நடையிலே தெரிந்தது. ரகசியங்களைச் சுமந்துகொண்டு அலைவது மாதிரியான அவஸ்தை. ஆளை அடியோடு மாற்றி விடுகிறது.

இருள் வீழ்ந்தவுடன்தான் நிம்மதியும்,

சுதந்திர உணர்வும் ஊறுகிறது. பகலெல் லாம் ஒரே வறட்சி. பகலெல்லாம் இரவுக் கான கிறக்கமும் ஏக்கமும்தான். இப்படி எத்தனை நாளைக்கு?

''யாரும் பார்த்தாங்களா?'' குரல் நடுங் கிற்று!

''அம்புட்டுத்தேன். இனிமே பொறவு இதெல்லாம் வேண்டாம்.''

படபடவென்று அவள் கண்கள் துடி துடித்தன. கண்களில் ஈரப் பிசுபிசுப்பு. கோவிந்து முகத்தைப் பார்த்தாள். அவன் தலை கவிழ்ந்து இருந்தான். நல்ல இருள். கருமேகக் கூட்டமொன்று மெல்ல இட,வலமாய் நகர்ந்து கொண்டிருந்தது. அவள் ஒரு பழைய போர்வையை உடம் பில் சுற்றியிருந்தாள். குளிர்காற்று. காது மடல், மூக்கு நுனி, உதடு என்று ஊசியாய் குத்திற்று. அந்தக் காற்றுக்கும், அவளின் அருகாமைக்கும் இதமாக இருந்தது.

''ஏன் ஒரு வடியா இருக்கிய?''

''யாரு நானா?''

''ம். ஒங்க உடம்பெல்லாம் நடுங்குறாப்புலெ இருக்கு...''

''ம்ஹூம்!''

அவன் சமாளித்தான். தோளை இப் பாலும் அப்பாலும் திருப்பிக் கொண்டான். சட்டென்று எழுந்தான். எழுந்தவிசையில் தலை தட்டி, குடிசைச் சருகுகள் உதிர்ந்தன. 'ம்... பாத்து' என்று பதறினாள். அவன் கைகளை முறுக்கிச் சோம்பல் முறித்தான். குடிசையை விட்டு வெளியே வந்தான்.

# காற்று வரும் பருவம்! 1

பாரதிபாலன்

''ம்''

''என்னது?''

''யாரோ பார்த்தாப்புலெதேன் படுது!''

''யாரு?''

''காங்கலெ! நான் பாட்டுக்கு வந்துட் டேன்.''

''என்னைக்கு வெளிச்சமாகுதோ!''

''ஆகட்டும்.''

''ஆகட்டுமுண்டா?''

''ஆகத்தானே வேணும்.''

உடம்பு வெடவெடவென்று ஆடிற்று. ஒரு அடி எடுத்து வைத்திருப்பான். சரக்கென்று கால் இழுத்துக் கொண்டது. ஒரே ஒரு கணம்தான் சட்டென்று அவள் பிடித்துக் கொண்டாள். இல்லா விட்டால் அப்படியே மல்லாந் திருப்பான். பொடனியில் அடி விழுந்திருக்கும். வழுக்கி விட்டு விட்டது.



கடந்த இருபது வருடங் களாக எழுத்துத் துறையில் இயங்கிவரும் பாரதிபாலனின் மொத்த சிறுகதைகளும் (700 பக்கம்) சமீபத்தில் 'பாரதி பாலன் சிறுகதைகள்' என்ற பெயரில் வெளிவந்திருக்கின் றன. இதுவரை செவந்தி

''பார்த்து வரப்படாதா?''

''ப்சு!''

''கத்தரிக்கு தண்ணி வுட் டுச்சு...''

''சொல்லப்படாதா? காலெப் பாரு!''

பூட்ஸ் போட்டதுபோல அப்பியிருந்தது மண்.

''தொட்டிலெ... தண்ணி கொண்டா ரேன்'' ஒரு பழைய பாலிடாயர் மருந்து டப்பாவில் தண்ணி மோந்து, கொண்டு வந்தாள். ஏழு எட்டு ஓட்டைகளில் அது ஒழுகிற்று. ஏழு எட்டு நடை கொண்டு வந்தாள். சரிப்படவில்லை. 'சித்த இரேன்' என்று தண்ணீர் தொட்டிக்குள் காலை விட்டு ஒரு ஆட்டு ஆட்டினான்.

''அடக்கடவுளே! குடிக்குற தண் ணிலெ...''

''காலையிலெ மோட்டார் ஒடு மில்லெ.''

''அதுக்காவண்டி?''

அவன் பம்புசெட் மோட்டார் தொட்டி யில் தாவி உட்கார்ந்தான். அவள் அவன் கையைப் பிடித்துக் கீழே இறக்கினாள்.

''ஏன்?''

''தூரத்திலே இருந்து பார்த்தா தெரி யும்!''

''தெரியட்டும்.''

''தெரியட்டுமா? அப்பனாச் சரி.''

அவன் அவளையே பார்த்தான். அந்தப் பார்வையின் வெதுவெதுப்புத் தாங்காது, தலை கவிழ்ந்து கொண்டாள்; அவன் அவளை அப்படியே பிடித்து இழுத்தான். கிளர்ந்தெழும்பும் மனக் கிலேசத்தோடு அவனைப் பார்த்தாள். சற்று சிலிர்த்து அவள் விலகுகின்றபோது அவன் கைகள் கொத்தாய் அவள் மீது விழுந்தன. அவன் மூச்சுத் திணறித்தான் கிடந்தான்.

''அப்பன் வெரசா வர்றேனுட்டுப் போச்சு. வாழைக்குத் தண்ணி கட்ட. சாமங் கழிஞ்சுதேன் திரும்பும்.''

''ஆத்தா..?''

''அதுக்கு மேலுக்குச் சேட்டமுல்லெ. அப்பத்தா வூட்டுக்குப் போயிடுச்சு.''

''ஒன்னியத் தனியாவா வுட்டுட்டுப் போயிடுச்சுங்க.''

''ஆம்பளைத் துணை வெச்சுட்டுத் தேன்.''

''யாரு?''

''ஏந்தம்பியத்தேன்.''

அந்த ஆம்பிளைத் துணை குப்புறக் கிடந்தது. ஒரு கால் பாய் விரிப்பிலும் மறுகால் தரையிலுமாக, தவளை மாதிரிக் கிடந்தது. பம்பு செட் மோட்டார் அறையை ஒட்டி ஒரு குடிசை. சின்னக் குடிசை. குடிசைக்குள் இடதுபக்கம் கயிற்றுக் கட்டில். வலது பக்கம் அடுப்புக் கல். பம்பு செட் அறையின் தலையில் கேள்விக்குறி மாதிரி ஒரு வளையம். அதன் வாயில் நாற்பது வாட்ஸ் பல்ப்! அந்த வெளிச்சம் கரைச்சு விட்ட பால் மாதிரி ஊறிக்கொண்டிருந்தது.

**(கல்கியில் வெளிவந்த தொடர் கதை), உடைந்த நிழல்... என்ற இரண்டு நாவல்களை எழுதி வெளியிட்டிருக்கும் இவரின் பூர்வீகம் தேனி மாவட்டம் சீலையம்பட்டி. வேலை நிமித்தமாகத் தற்போது சென்னையில் வசித்து வருகிறார்.**

''ஆத்தா எப்ப வரும்?''

''சொகமானாத்தேன்.''

''அது வந்துட்டா நமக்குத் தோது இருக்காதே!''

''இப்ப முட்டும்...''

''பயமில்லாம இருக்கலாம்.''

''யாரோ பார்த்தாகண்டீக?''

''ப்சு.''

''ஒருநா இல்லாட்டி ஒரு நா, எந்த விஷக் கண்ணுலயாவது விழப் போவுது!''

''என்ன ஆகும்?''

''ஊர் இருக்கிற வளமை தெரியாதா?''

பஞ்சவர்ணத்தின் பார்வை சோளப் பயிருக்குத் தாவிற்று. காற்றலையில் பயிர் நெளிந்தோடிற்று. அதையே பார்த்துக் கொண்டிருந்தாள். பார்க்கப் பார்க்க மனசு விரிகிறது. குதிப்பும் குதூகலமும் கூடுகிறது.

''என்ன பஞ்சு?''

''ஒண்ணுமில்லெ.''

''என்ன யோசனை?''

''ஒங்களப் பத்திதேன்.''

''திடீர்னு என்னவாம்?''

''இந்தப் பய ஊர்லெ இருந்து என்னாவப் போவுது? வேலை வெட்டிண்டு போனா மதிப்பா இருக்கும்!''

''இப்ப இல்லைங்குறியா?''

''அதுக்கா சொல்லுது? இம்புட்டுப் படிச்சுப்பிட்டு எதுக்கு?''

''கொழாச் சூட்ட போட்டுக்கிட்டு, அடிமை வேலை பண்ணணும்!''

''ப்சு! அதுக்கில்லை.''

''பின்ன என்னவாம்! வேலை வேலைன்னு நொச்சுக்கிட்டே இருந்தா? மனுஷனுக்குச் 'ச்சைனு' வராதா?''

''சரி. இனி பேசலை!''

''எங்கையாவும் இப்படித்தான். சாப்பிட உட்காரும்போதுதான் இந்த நொட்டப் பேச்சைக் கிளப்புவாரு...''

''ஒண்ணு சொல்லட்டுமா?''

''சொல்லு.''

''இனி வெவசாயத்தை நம்பி ஆகுமா? சம்சாரிங்க படுறபாட்டைப் பாத்துக்கிட்டுத் தானே இருக்கு!''

''அண்ணன் வியாபாரத்துக்குத் திரும்பிடுவாரு. தம்பி வேலைக்குப் போயிடுவான்.''

''சரி நீங்க?''

''எனக்கு வேற ஐடியா இருக்கு பஞ்சு. ஒரு ஸ்கூல் ஆரம்பிக்கணும்.''



**''மழை பற்றிய அறிவிப்பைக் கேட்டதும் உன் கணவர் அப்செட் ஆயிடறாரா... ஏன்?''**

**''மாமூல் வாழ்க்கை பாதிக்கப்படுதாம்.''**

**- ஜி. சுந்தர ராஜன்**

''உள்ளதுக்கே ஆளைக் காணோம். மதியத்துக்கு வந்து தின்னு போட்டுப் போயிடுதுக...''

''இது வேற. பாரேன்.''

''அப்படிண்டா சரி... எனக்கு ஒரு வேலை போட்டுத் தருவீகளா?''

''நீதான் கரஸ்பாண்டெண்ட்...''

''கண்றாவி. ஒரு 'ஆயா' வேலை கிடைச்சாப் போதும்...''

''ஆரம்பிச்சுட்டியா?''

''தகுதிக்குத் தக்கபடித்தானே ஆசைப் படணும்...''

''பஞ்சு. வேற பேசலாமா?''

''நெஜம் பேசனா ஆவாது...''

''நீ ஒண்ணும் பேச வேண்டாம். ப்சு! உனக்கு எப்படிப் புரியவைக்கிறது?''



''என்னை வுடுங்க. இந்த ஊருக்குப் புரிய வைக்க முடியுமா...?''

''சரி. நீ இப்ப என்ன சொல்ல வர்றே?''

''உங்களுக்கு ஒண்ணுமே புரியலே. கனாவுலே இருக்கீங்க...''

''வாயை மூடு பஞ்சு. நீ என்ன சொல்ற. இந்த வாக்குலே என்னிய ஏமாத்திட்டுப் போயிடுவீளானு கேக்குறே. அதானே?''

''ச்சசீ... அசிங்கமா பேசாதீங்க...''

''பின்ன என்னவாம்?''

''நீங்க என்ன புரிஞ்சுக்கிட்டது அம்புட்டுத்தான்!''

''ஆமா! புரியாமத்தேன்...''

''புரிஞ்சிருந்தா இந்த வார்த்த வருமா?''

''நீதான் நொய் நொய்ங்கிறே...''

''ஆமா, நாந்தான்'' என்று உடலைச் சிலுப்பினாள். சட்டென்று அவள் முகத்தில் ரத்தம் பாய்ந்தது. கண்களில் நீர் கூடு. உள்ளங்கையில் முகத்தை மூடிக் கொண்டாள்.

கோவிந்து அவள் முகத்தினை ஊடுருவிப் பார்த்தான். அவள் கண்கள் தளர்ந்து தவித்தன. மேற்கொண்டு அவனால் அங்கு நிற்க முடியவில்லை. தளர்ந்த கைலியை எடுத்து டப்பாகட்டு கட்டிக் கொண்டான். செருப்பை மாட்டினான். சரசர வென்று நடக்கத் தொடங்கிவிட்டான். அவனுக்கென்று ஒரு இடம் இருந்தது. ரகசிய இடம். கொடிகளையும் செடிகளையும் போட்டு மூடிவைத்துவிட்டு வந்திருந்தான். இப்போது அது திறந்து கிடந்தது. திடுக்கிட்டான். சுற்றும்முற்றும் பார்த்தான். ஒன்றுமில்லை. வரும்போது மூடி வைத்து விட்டுத்தான் வந்தான். யாருக்கும் தெரியாது. ரகசிய இடம். மனசில் கலவரம். சட்டென்று உடலைத் தணித்து, அந்த வட்ட வடிவமான ஓட்டைக்குள் தன்னைத் திணித்தான். சட்டென்று வெளியேற, படீரென்று இன்னொரு உருவமும் தாவிற்று. ஒருகணம் உடம்பெல்லாம் உதறலெடுத்திற்று. தடதடவென்று தொடையிரண்டும் ஆட்டம் கண்டன. பன்றி, கரும் பன்றி. அதனைப் பார்த்த பின்னும் உடலின் நடுக்கம் குறையவில்லை. இன்று சகுனம் சரியில்லை. தொட்டதெல்லாம் துலங்கவில்லை. ஒற்றைப் புளியமரம் தாண்டி நடந்தான். தூரத்தில் தெருவிளக்கு மினுக் மினுக்கென்று எரிந்து கொண்டிருந்தது!

## ''தகுதிக்குத் தக்கபடித்தானே ஆசைப்படணும்.''

(காற்று வீசும்)

## காதைக் கொடுங்க...

● "ஏதாவது ஒரு திருப்பம் ஏற்பட்டு, நம்முடன் யாராவது கூட்டணி வைக்க மாட்டார்களா?" என்ற ஏக்கத்தில் இருக்கிறது தமிழக பா.ஜ.க. பாராளு மன்றத் தேர்தலில் யுக்தியைத் தீர்மானிக்க மேலிடப் பார்வையாளர் ரவிசங்கர் பிரஸாத் முன்னிலையில், தமிழக பா.ஜ.க. பிரமுகர்கள் கூட்டம் நடந்தது. மாநிலத் தலைவர் இல. கணேசன், "நாம் எல்லாத் தொகுதி களிலும் போட்டியிட வேண் டும்" என்று முழங்கினார். உடனே திருநாவுக்கரசர், "அப்படிச் செய்து, நமது நிலையையும் உழைப்பை யும் வீணாக்கக்கூடாது" என்று எச்சரித்து, "நாகர்கோவில், கோவை, தென் சென்னை போன்ற சில செல்வாக்குள்ள தொகுகளில் மட்டும் போட்டியிடலாம்" என்றாராம். அடுத்து, குமாரவேலு, "அ.தி.மு.க. போட்டியிடும் தொகுதி களில் நாம் போட்டியிடக் கூடாது. தேர்தலுக்குப் பின் அக்கட்சி நம்முடன் கைகோக்க வாய்ப்புண்டு" என்று முடித்தாராம். மேலிடப் பார்வையாளர், தலைசுற்றிப் போய், "தேர்தல் அறிவிப்பு வந்த பிறகு முடிவு செய்யலாம்" என்று ஜூட் விட்டு விட்டார்.



## பாவம் பா.ஜ.க.!

● தமிழக பட்ஜெட் கூட்டத் தொடர், கொஞ்சம் முன்கூட்டியே நடக்கவிருக் கிறது. வாரத்துக்கு இரண்டு நாட்கள் நடமாடும் ரேஷன்கடைகள் வீடுதோறும் செல்லப் போகின்றனவாம்! நெல்லுக்கும், கரும்புக்கும் விவசாயிகள் திருப்தியடை யும்படி கொள்முதல் ஏற்றிக் கொடுக்கப் போகிறார்களாம். தமிழக அரசின் ஊழியர் களுக்கு ஆறாவது சம்பளக் கமிஷன் அள்ளிக் கொடுக்கவிருக்கிறது. தனியார் பள்ளிகளில் ஏழைகளின் குழந்தைகளுக் கும் இடம். இப்படிப் பல சலுகை அறிவிப்புகள் இடம்பெறவிருக்கின்றன வாம்.

● திருமங்கலம் தொகுதியில் வாக்குப் பதிவன்று இரவு அ.இ. அ.தி.மு.க. பிரமுகர்களுக்கு போயஸ் தோட்டத்திலிருந்து 'செமை' அர்ச் சனையாம். காரணம், மதியம் 12 மணிக்கே அ.தி.மு.க. ஏஜெண்டுகள் பலர் வாக்குச் சாவடிகளிலிருந்து 'அம்பேல்' ஆகிவிட்டார்களாம். கிராமத்திலிருந்த பல அ.தி.மு.க. பிரமுகர்கள், கரை வேட்டியைத் தூக்கிப்போட்டு, 'மப்டியில்' உலா வந்தார்களாம்.

- ஸ்ரீநி

# மண்பாண்ட

''பொங்கல் (தை) மாசம்னு இல்ல. வருஷத்துல எல்லா மாசத்துலயும் எங்க ஊர்ல மண்பாண்ட ஏவாரம், எறக்கம் இல்லாம நடந்துக்கிட்டே இருக்கும். ஊரு மொகப்புல ரெண்டு சூளையில பானைகளைச் சுட்டு எடுத்துக்கிட்டே இருப்போம். இங்கிருந்துதான் சேலம், தர்மபுரி, ஈரோடு, கோவை மாவட்டப் பகுதிகளுக்கு மண்பாண்டங்கள் போகுது. அதனால எங்க ஊரு சனங்களுக்கு வருஷம் முச்சூடும் வேலை வெட்டி கெடைக்குது!'' எனக்கூறி 'அதிர'வைக்கிறார் வாழப்பாடி அருகேயுள்ள பெரிய கிருஷ்ணாபுரம் கிராமத்தின் மண்பாண்ட உற்பத்தியாளர் ஒருவர்.

ஒவ்வொரு வீட்டின் முன்பாகவும், மண்பானைகள் அணிவகுத்தாற்போல தரையில் அடுக்கி வைக்கப்பட்டுள்ளன. சுமார் நூறு குடும்பங்களில் முன்னூறுக்கும் மேற்பட்டோருக்கு, உள்ளூரிலேயே வேலை தந்து வருகிறது மண்பாண்டத் தொழில்.

''கிராமங்கள்ல இந்தத் தொழில் இப்ப ரொம்பவே கொறைஞ்சி போச்சுன்னு சொல்றாங்க. இந்த ஊர்ல மட்டும்தான் எங்காளுங்க நெறைய குடும்பங்க ஒரே எடத்துல வாழ்ந்துக்கிட்டு இந்தத் தொழிலைச் செஞ்சுட்டு வர்றோம்னு நெனைக்கிறேன்!'' என்கிறார் வெங்கடாசலம்.

அது சரி. கிராமத்து சனங்க எல்லாரும் இந்த வேலை செய்யறதுக்கு, இவங்களுக்கு எங்கேருந்து மண்ணு கெடைக்குது? ''ஊர்ல பெரிய ஏரின்னு ஒண்ணு. அதுல கெடைக்குது வண்டல் மண்ணு. ரொம்ப அற்புதமான மண்ணு. பானை வனையறதுக்குனு தோதான மண். காலங்காலமா வெட்டிக்கிட்டே இருக்கோம். மழைக்காலத்துல ஏரிக்குள்ளார மண்ணு வந்து சேரும். ஒரு பக்கம் வெட்டுவோம். இன்னொரு பக்கம் மண்ணு வந்து சேர்ந்துடும். மாத்தி மாத்தி வெட்டுவோம். இந்தக் களிமண்ணோட கை வாகு வேற எந்த ஊர் மண்ணுலயும் கெடைக்காதுங்க!'' என்று 'மண்'ணின் மாண்பு பற்றிப் பேசுகின்றனர் ஊர்க்காரர்கள்.

''எங்க ஊரு பொங்கல் பானையும், பொண்ணு வூட்டு சீர் பானையும், அரசாணிப் பானையும் ரொம்ப ஃபேமசு. அதுகளப் பார்க்கவே அத்தினி அழகா இருக்கும். பானையைச் சுத்திலும் கலர் கலரா கோடு வரைஞ்சு, கட்டம் போட்டு கண்ணைப் பறிக்கறாப் போல தயார் பண்ணுவோம். பொங்கல் பானையில சுத்தியும் கோலம் வரைஞ்சிருப்போம். புதுசா கண்ணாலம் ஆகிப் போனவங்களுக்கு பொண்ணு வூட்லேர்ந்து சீர் தருவாங்களே, அதுக்குனு பெரிய பானைல டிசைன் வரைஞ்சி வெச்சிருப்போம். கண்ணாலத்துக்கு அரசாணிப் பானைகளும் கலை நேர்த்தியா கலர் கலரா அதுக மேல படம் வரைஞ்சிருப்போம். கண்ணாலம், பொங்கல், பொங்கல் சீருன்னு எங்க ஊரு பானைக்கு ஏக

# கிராமம்!



கிராக்கி!'' எனக் கூறுகிறார் மல்லிகா.

''எங்க ஊர் ஏரி வண்டல் மண்ணை ஈரக்கட்டியா வெட்டி எடுப்போம். காயவைத்து உரல் குந்தாணி யில இடிக்கப் பவுடராக்குவோம். அதைக் கரைச்சு தரையில ஊத்திப் பேத்து எடுப்போம். அதுதான் பானை வனையறதுக்குத் தோதான களிமண். பானை வனைஞ்சு வெயில்ல கொஞ்சம் காய வெச்சு அப்புறம் சூளைக்கு அனுப்பிடுவோம். ஒரு சூளையில இருநூறு முன்னூறு பானை வெச்சு சூளை போவோம். சட்டி நல்லா வேக ரெண்டு மணி நேரம் ஆகும். குடிநீர்ப் பானை, பொங்கல் பானை, சீர், அரசாணிப் பானை, குழம்பு சட்டி இதெல்லாம் நாங்க தயாரிக்கறது. முக்கியமான சமாச்சாரம். எங்க வீட்ல இப்பவும் மண் பானைச் சோறு, மண் சட்டிக் குழம்புதான். இதவோட ருசி வேற எதுலயும் வராது!'' என மண்பாண்டங்கள் மீது சத்தியமாக உறுதியாய்க் கூறுகிறார் பெரிய கிருஷ்ணாபுரம் மண்பாண்ட உற்பத்தியாளர் வெங்கடாசலம்.

செய்தியும், சித்திரங்களும் :

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

**நாகை மாவட்டம், கூத்தூர் கிராமத்தில் அமைந்துள்ளது வினோபா ஆசிரமம். அதன் நிறுவனர்கள் கிருஷ்ணம்மாள் - ஜெகந்நாதன் தம்பதியினர். காந்தியவாதிகள். சர்வோதயத் தொண்டர்கள். அவர்களின் சேவையைக் கௌரவிக்கும் வகையில் அமெரிக்காவின் சியாட்டில் பல்கலைக்கழகம் 'ஓபஸ்' விருதும், ஸ்வீடனின் ரைட் லைவ்லிஹூட் ஃபவுண்டேஷன் அமைப்பு 'மாற்று நோபல்' விருதும் வழங்கிச் சிறப்பித்துள்ளன. நாற்பது நாட்கள் அமெரிக்கா, பத்து நாட்கள் ஸ்வீடன் என சுற்றுப்பயணம் செய்து திரும்பியுள்ளார் கிருஷ்ணம்மாள்.**



## அவரது பயண அனுபவத்திலிருந்து...

● அமெரிக்காவில் சாலைகளில் வாகன ஓட்டிகள், ஹாரன் சவுண்டை உபயோகிப்பதில்லை. ஆம்புலன்ஸ் மட்டும்தான் ஒலி எழுப்பிச் செல்லலாம். வாகனங்களை எங்கேனும் 'பார்க்' செய்தால், எவ்வளவு நேரம் என நாம் குறிப்பிட வேண்டும். அந்த நேரத்துக்குள் வந்து வண்டியை எடுக்க வேண்டும். நேரம் கடந்துவிட்டால் முதல் எச்சரிக்கை ஒலி கேட்கும். இரண்டாவது எச்சரிக்கை ஒலிக்குப் பின்னர், காவல் துறையினர் கிரேன் மூலமாக வண்டியைக் கொண்டு சென்று விடுகின்றனர்!

# பகலிலும்



● பெண்களும் ஆண்களும் அங்கு யாரும் தங்க நகைகளைப் பயன்படுத்துவதில்லை. பணமும் அவர்கள் கையில் வைத்துக் கொள்வதில்லை. எங்கு சென்றாலும் அவர்களுக்குத் துணை நிற்பது கிரெடிட் கார்டுகள்.

● சான்டியாகோ பகுதியில் ஒவ்வொரு வீடுகளிலும் குடிநீர் இணைப்புக்கு இரண்டு லைன்கள். ஒரு லைனில் தண்ணீர். இன்னொரு லைனில் வெந்நீர். கோயில் இல்லா ஊரில் குடியிருக்கலாகாது நம்ம ஊர் மூதுரை. 'வெந்நீர்க் குழாய் வசதி இல்லாத வீட்டில் குடியிருக்கக் கூடாது' என்பது அங்கு அனுபவ வார்த்தை.

● ஒலிம்பியா நகரில் பெரிய ஏரி. அதனுள் படகு வீடுகள். நிலப்பகுதியில் பெரிய வீடுகளில் வசிக்கும் பணக்காரர்கள்கூட, ஏரிக்குள்ளான படகு வீடுகளில் சந்தோஷமாக

# தெருவிளக்கு எரியும் தேசம்!

வாழ்கின்றனர். படகு வீடுகளில் வசிப்பதை கௌரவத்தின் அடையாளமாகக் கருதுகின்றனர்.

● நாங்கள் பயணம் செய்த பகுதியில் நில மதிப்பு குறைந்துகொண்டே வருகிறது. கட்டிடங்களின் மதிப்பும் சரிகிறது. இந்தியாவிலிருந்து சென்ற பொறியாளர் ஒருவர் கலிபோர்னியாவில் காலி மனைகளை விலைக்கு வாங்கி, விதம்விதமான வீடுகள் கட்டி விற்பனைக்குக் கடை விரித்துள்ளார். வாங்கத்தான் யாருமில்லை அங்கு.

● கலிபோர்னியாவில் காய்கறிகள் அதிகம் விளைகின்றன. நம்மூரின் எல்லாக் காய்கறிகளும் அங்கு உள்ளன. கறிவேப்பிலையைத் தவிர.







✱ விருது பெற்றபோது...

● அமெரிக்க அதிபர் தேர்தலின்போது, சான்டியாகோ நகரில் இருந்தோம். ஆரவாரம் இல்லாத அமைதியான அந்தத் தேர்தலை, நம்மால் இங்கு நினைத்துக்கூடப் பார்க்க இயலாது. அத்தனை எளிமை. வீதிக்கு வீதி பொதுக்கூட்டம் நோ. சுவர்களில் வண்ண போஸ்டர்கள் இல்லை. ஒலிபெருக்கிச் சத்தம் கேட்காத, கள்ள வோட்டுகள் பதிவாகாத தேர்தல்!

● சியாட்டில் பல்கலைக்கழக விழாவில் நாடகம், கர்நாடக இசைப் பாடல்கள், நடனம் என வெளுத்து வாங்கினர். நடனத்தில் ஒரு காட்சி, திருவாரூர், நாகை கடலோரப்

பகுதிகளில் இறால் பண்ணைகளுக்கு எதிராக நாங்கள் மேற்கொண்ட உண்ணாவிரதக் காட்சி அபிநயித்துக் காட்டப்பட்டது. நடனக் காட்சி நிறைவடைந்த பின்னர், அரங்கில் பலரது கண்களில் கண்ணீர்த் துளிகள்.

● சான்பிரான்ஸிஸ்கோ நகரில் தமிழ்ச் சங்கம் ஒரு கூட்டம் நடத்தியது. பாரதியார் பாடல்களைப் பாடி அவையோரை மகிழ்வித்தார் ஒரு தமிழர். 'எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா' தொடங்கி, 'சிந்துநதியின் மிசை நிலவினிலே' பயணித்து, இறுதியில் 'சின்னஞ்சிறு கிளியே கண்ணம்மா'வில் நிறைவு செய்தார். சான்பிரான்சிஸ்கோ நகரில் 'சின்னஞ்சிறு கிளியே' பாடல் கேட்பேன் என நினைக்கவேயில்லை.

● ஸ்வீடனின் உமாயூர் நகரம். அங்கு ஒரு பெரிய ஆறு உறைந்து கிடக்கிறது. வீடுகள், பள்ளிகள் பனிக்கட்டிகளால் நிரம்பியுள்ளன. அப்படியிருந்தும் காலை 7.30 மணிக்கே பள்ளிகள் அங்கு துவங்கி விடுகின்றன.

● பகலில் அங்கு சூரியனைக் காணவே முடியவில்லை. இயற்கை வெளிச்சத்துக்கு அங்கு வாய்ப்பில்லை. அதனால் பகலிலும் மின்விளக்குகள் எரிந்து கொண்டேயிருக்கின்றன. தெருவிளக்குகள் பகலிலும் பளிச். இரவிலும் பளிச். இருபத்து நான்கு மணி நேரமும் மின்னொளி தேவைப்படுகிறது அங்கு. 'பவர் கட்' அங்கு வழக்கத்தில் இல்லாத வார்த்தை. 'அப்படீன்னா என்ன?'ன்னு கேட்கிறார்கள்.

● ஸ்வீடனில் டிசம்பர் 8 அன்று, மாற்று நோபல் பரிசான 'வாழ்வுரிமை சாதனையாளர்' விருது எனக்கு வழங்கப்பட்டது. ஒபஸ் விருதுத் தொகை நாற்பத்தெட்டு லட்சம், மாற்று நோபல் விருதுத் தொகை நாற்பத்து நான்கு லட்சம் என இதன் மொத்தத் தொகையையும், ஏழைகளுக்கு கான்கிரீட் வீடுகள் கட்டித் தருவதில் செலவிடத் தீர்மானித்தேன்.

● அமெரிக்கா, ஸ்வீடன் என ஐம்பது நாட்களில் நூற்றைம்பது கூட்டங்களில் பேசியுள்ளேன். என்னை எதிர்கொண்டவர்கள் கேட்ட கேள்வி. ''காந்தியை நீங்க நேரில் பார்த்திருக்கீங்களா?'' என்பதுதான். அவர்களின் இதயங்களில் இன்னமும் காந்தி உயிரோடு இருக்கிறார் என்கிற உணர்வுடனே இந்தியாவில் கால் பதித்தேன்.

தொகுப்பு : **ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



# அறிவு எப்போ வரும்?



''எதுக்கு பில்டிங் மேல 'L' போர்டு வெச்சிருக்கு?''

''அந்த பில்டிங் கட்டின காண்ட்ராக்டர், டிசைனர் எல்லாம் முதல்முறையா டிரெய்னிங்ல கட்டின பில்டிங்காம்!''



''உன் மாமியாருக்கு ஆசை ஆசையாய் அல்வாவை ஊட்டி விட்டா யாமே... என்னடி விஷயம்?''

''அவங்களுக்கு 'சர்க்கரை' வியாதி இருக்குன்னு டாக்டர் கன்ஃபார்ம் பண்ணிட்டார்!''

- உ.குணசிலபாண்டியன்



''மாப்பிள்ளை வீட்டுக்காரங்க சீதனமா 'icon' கார் கேட்டாங்களா! அதுக்கு நீங்க என்ன சொன்னீங்க?''

''I con'னு சொல்லிட்டேன்!''

- சம்பத் குமாரி



''இந்தப் பீரியட் முழு வதும் வெளியே நில்லு. அப்பதான் அறிவு வரும்.''

''ஸார்... அப்போ நீங்க பாடம் சொல்லிக் குடுத்தா அறிவு வராதா?''

- தா.ஆறுமுகம்



''அமைச்சரே! எதிரி படை யெடுத்து வருகிறானாம்! நாம் மோசம் போகப் போகிறோம்!''



''இல்லை மன்னா... தாங்கள் மோட்சம் போகப் போகிறீர்கள்!''

- தஞ்சை தாமு



# சொல்வாசம்

செம்மண் நிறத்தில்
செல்கிறது
கிராமத்துப் பேருந்து.

நாட்டுப்புற மனிதர்களின்
வாழ்க்கை போலவே
ஓட்டை உடைசலாக உள்ளது அது!

வண்டிக்கேற்ற வயதான ஓட்டுநர்
அவசரமற்ற உலகம் நோக்கி
அவசரமின்றிச் செலுத்துகிறார் வாகனத்தை!

நடத்துநர்
முகச்சவரம் செய்துகொள்வதில்லை
கிராம சவாரிக்கு
போதும் இந்த முகம்போலும்!

செம்பட்டைத் தலையும் அதில்
செம்பருத்திப் பூவுமாக
சேற்றுக்காலுடன்
ஏறிய பெண்களும்
சீவப்படாத
தலையுடன் ஆண்களும்

ஒருமரத்தடியில் ஏறி
மற்றொரு மரத்தடியில்
இறங்குகின்றனர்!

## செம்மண் நிறப் பேருந்து

தஞ்சாவூர்க் கவிராயர்

கிராமத்துக் கடைத்தெருவில்
பேருந்து கிளப்பிய
புழுதியைப் பொருட்படுத்தாமல்
நிமிர்ந்து பார்க்கிறார்
டெய்லர் -
கடன் சொல்லிப் போனவன்
இந்தப் பேருந்திலாவது இறங்குவானா
என்பதான பார்வையுடன்!

2

கூரைவேய்ந்த
மண்சுவர்களின் வெளிப்புறம்
நாடோடி மன்னன் புதிய காப்பி
சுவரொட்டியும்
உட்புறம்
சிகை அலங்காரக் கூடமும்
உள்ளது

கையில் கத்தியுடன்
கையாட்டுகிறார்
முடிதிருத்துநர்
ஓட்டுநரைப் பார்த்து.

செம்மண் நிறத்தில்
செல்கிறது பேருந்து
மரங்களின் ஊடாக
மற்றொரு
சிவராசியாய்!



# கல்லூரிச் சாலை

"ஹய்யா வாங்க வாங்க வாங்க... எப்பத்தான் எங்க காலேஜுக்கு வரப் போறீங்களோன்னு நினைச்சுக்கிட்டே இருந்தோம். நீங்களே வந்துட்டீங்க" என்ற ஒரு பலமான கல கல வர வேற்புடனும் ஷோக்கான பல ஜோக்கு களுடனும் தொடங்கியது இந்த வார கல்லூரிச் சாலை.

"எங்க காலேஜ் காம்பஸ்ல ஏகப் பட்ட மரங்கள் இருக்கு பார்த்தீங்களா? இதுல அரச மரத்தோட இலைகள் 20, வேப்பமரத்தோட இலைகள் 10, ஆல இலைகள் 20...மொத்தத்தையும் கூட்டினா என்ன வரும்ன்னு கரெக்டா சொல்லுங்க பார்க்கலாம்?'' என்ற சவாலை சத்ய பாமா முன்மொழிய, "நான் கணக்குல புலி இல்லன்னாலும் ஏதோ ஒரு பூனைன்னாவாவது சொல்ல லாம்'' என்று அதற்கான விடை யாக "50 இலைகள்... கரெக்டா'' என நாம் விடையளிக்க "சூப் பரோ சூப்பர்... மொத்தமா கூட்டினா குப்பைதான் வரும்'' என சத்யபாமா சத்தமாகச் சொல்லிச் சிரிக்க, "யக்காவ் சத்தியமா இனி உங்க கேள்வி களுக்கு நான் பதில் சொல்லவே மாட்டேன்'' என நாம் ஓட, "இருங்க இருங்க அதுக்குள்ள எங்க கிளம்பிட்டீங்க? இது உங்களுக்கு மட்டும் இல்லீங்க. கல்லூரிச்சாலைல உலா வர்ற எல்லா கல்லூரி கண்மணிகளுக் குமா சேர்த்து ஒரு சூப்பரான டிப்ஸ் கொடுக்கறேன். கவனமா





# ஜாலிமொழி அரட்டை!

குறிப்பு எடுத்துக் கோங்க...'' என்ற பலத்த பீடிகையோடு ஆரம்பித் தார் அப்துல் ரஹீம்.

''உங்களுக்குள்ள எவ்வளவு எவ்வளவோ கனவுகள் இருக்க லாம் ... அதுல ஒண்ணு காலேஜ் first ஆகவோ ஏன் university first ஆக வரணும்னுகூட நீங்க நினைக்கலாம். அதுக்கு நீங்க செய்ய வேண்டியதெல்லாம் நான் சொல்லப்போற இந்தப் பழக்க வழக்கத்தைத் தவறாம கடைப் பிடிக்கணும் சரியா? முதல்ல காலங்கார்த்தால 4.30 மணிக்கே எழுந் துடணும். அப்புறம் 5.00 மணிக்கெல் லாம் உங்க அம்மாவை எழுப்பி அவங்க கொடுக்கற காப்பியோ, டீயோ குடிச்சிட்டு, 5.30 மணிக்கெல்லாம் டாண்ணு குளிச்சிடணும், குளிருது, சூடு தண்ணி இருந்தாத்தான் குளிப்பேங்கற அடமெல்லாம் கூடவே கூடாது. 6.30

மணிக்கெல்லாம் ட்ரெயினோ, பஸ்ஸோ பிடிச்சு நேரா காலேஜுக்கு வந்துடணும்... அப்ப நிச்சயம் நீங்கதானே காலேஜ், யூனிவர்சிட்டி எல்லாத்துலேயும் முதலா இருப்பீங்க... எப்படி என் டிப்ஸ்?'' எனக் கேட்ட அப்துல் ரஹீமிடம்... ''கலக்கிட்ட மச்சான்... அது எப்படிடா மழை அடிச்சாலும் வெயில் அடிச்சாலும் உன் ஞாபகமாவே இருக்கு எனக்கு?''



எனக் கேட்டார் பிரதாப் குமார். ''எல்லாம் நான் அப்பப்ப அள்ளி விடற டிப்ஸ் செய்யற வேலையா இருக்கும்'' என அப்துல் பதில் அளிக்க, ''அதெல்லாம் ஒண்ணும் இல்ல... என் குடையை நீ எடுத்துக்கிட்டு போய்ட்டு இன்னும் ரிடர்ன் பண்ணவே இல்ல பார்த்தியா அதான்... இப்படி ஞாபகம் வருதே நடக்குது'' என்றார் பிரதாப்.

''குரைக்கிற நாய் கடிக்காதும் பாங்களே அது ஏன்னு யாராவது என்னைக்காவது யோசிச்சுப் பார்த்திருக்கீங்களா?'' எனத் தடாலென ஒரு கேள்வியை முன்வைத்தார் தனசேகர்.

''அதெல்லாம் ஒரு பழமொழி. அதுக்கெல்லாம் எதற்கு இங்கே விளக்க மொழி?'' என வினவிய வஹீதா பானுவைப் பார்த்து, ''குரைக்கிற நாய் ஏன் தெரியுமா கடிக்காது? ஏன்னா, ரெண்டு வேலைகளையும் ஒரே டயத்துல செய்ய முடியாது'' எனக் கடிக்க ஆரம்பித்தவரை, ''யப்பா கண்ணுங்களா போதும் சாமி போதும்... சூப்பரா மொக்கை போடறீங்களே?'' என நாம் கேட்டதற்கு... ''இந்த மொக்கைஸ் போதுமா இன்னும் கொஞ்சம் வேணுமா?'' என ஒட்டு மொத்த St.Louis Institute of Deaf and Dumb மாணவர்கள் அபிநயிக்க எஸ்கேப் ஆனோம். 'எங்கள் மீது பரிதாபப் பார்வையை வீசாதீர்கள்... நாங்கள் யாருக்கும் சளைத்தவர்கள் அல்ல... எங்களாலும் எல்லாம் செய்ய முடியும், எதையும் சாதித்துக் காட்டிடவும் முடியும்' எனச் சொல்லாமல் சொல்லிச் சென்றனர் இந்த கல்லூரி மாணாக்கர்கள்.

**- நளினி சம்பத்குமார்**

படங்கள் : **குமார்**

# ரயில் ராதிகா to ராடன் ராதிகா



# 13

# சிவந்துப் போன சிரஞ்சீவி கன்னம்!

# ராதிகா

**நா**ன் பதறிப்போய் ராஜு சுந்தரத்தின் அருகில் ஓடினேன். அடி வாங்கி, கீழே விழுந்தவர் உடனே சுதாரித்து எழுந்து கொண்டார். அன்றைக்கு அந்தக் காட்சி எடுத்ததில் ஏகப்பட்ட பிரச்னைகள். ஆக்ஷன் தப்பு, கண்டினியூட்டி சரியில்லை, கேமரா ஆங்கிள் சரியாக வைக்கப்படவில்லை. கிட்டத்தட்ட பதினெட்டு டேக் வரைக்கும் போனது. ஒவ்வொரு டேக்கிலும் நான் ராஜு சுந்தரத்தை அடிக்க வேண்டும்.

உண்மையில், எனக்கு அவரை அடிக்கிறோம் என்கிற உணர்வே இல்லை. ஒன்பதாவது டேக்கிலோ, பத்தாவது டேக்கிலோதான் சட்டென்று அது உறைத்தது.

அடுத்த நாள் ஷங்கர், 'நீங்க ராஜுவைக் கொஞ்ச நஞ்ச அடி அடிக்கலைங்க, பின்னி எடுத்துட்டீங்க' என்றார்.

அடிவாங்கியதில், அடுத்த நாள் ராஜு சுந்தரத்துக்கு ஜுரம் வந்துவிட்டது. வீட்டில் அவருடைய பாட்டி திட்டியிருக்கிறார். 'ஏண்டா! இப்பிடி அடி வாங்கி சாவுறதுக்காடா நீ நடிக்கறதுக்குப் போனே?' என்று கேட்டுப் புலம்பியிருக்கிறார்.

இன்றைக்கும் ராஜுசுந்தரம் என்னைப் பார்த்தால் அந்த விஷயத்தைச் சொல்லிச் சொல்லி சிரிப்பார். வெளியிலிருந்து பார்ப்பவர்களுக்கு சினிமா என்பது பிரமாண்டம் மட்டுமே. அதில் வேலை பார்க்கிறவர்

களுக்குத்தான் அதன் வலியும் வேதனையும் புரியும்.

**ரா**ஜசுந்தரத்தைப் போலவே என்னிடம் அடி வாங்கிய இன்னொரு நடிகர் சிரஞ்சீவி.

நான் தெலுங்கில் நடித்த முதல் படம் 'நியாயம் காவலி.' அதைத்தான் தமிழில் 'விதி' என்கிற பெயரில் எடுத்தார்கள். அதில் ஒரு காட்சியில் ஏழு பக்க வசனத்தைப் பேசி, அவர் சட்டையைப் பிடித்து இழுத்து, கன்னத்தில் மாறி மாறி


★ சத்ருகன்சின்ஹா

அறையவேண்டும். எனக்கு அப்போது தெலுங்கும் சரியாகப் பேச வராது. அன்றைக்கும் அதிகமான டேக்குகள் எடுக்கவேண்டியிருந்தது.

நான் சிரஞ்சீவியின் சட்டையைப் பிடித்து இழுத்து, 'ஏன் அப்படிப் பண்ணினே! நான் உனக்கு என்ன செஞ்சேன்?' என்று வசனம் பேசி, அவர் கன்னத்தில் அறைந்து, அவரைத் தள்ளி விட்டு, மறுபடியும் அறைந்து கொண்டே இருக்கிறேன். சிரஞ்சீவி ஷாட்டின்போது ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. காட்சி எடுத்து முடித்ததும் தான் அவர் முகமெல்லாம் சிவந்திருந்ததைக் கவனித்தேன். அவரைப் பார்க்கவே பாவமாக இருந்தது. இத்தனைக்கும் ரொம்ப கூலாக இருந்தார் சிரஞ்சீவி. 'இட்ஸ் ஓ.கே.' என்றார் சிரித்தபடி.

**ர**ஜினிசாருடன் நான் நடித்த 'போக்கிரி ராஜா' படத்தை என்னால் மறக்கவே முடியாது. அதில் 'போக்கிரிக்கு போக்கிரி ராஜா...' என்று ஒரு பாட்டு வரும். அந்தப் பாடலை திருத்தணியில் ஷூட் செய்தார்கள். ஒரு மலைப்பகுதியில் படப்பிடிப்பு நடந்தது. நல்ல வெயில் வேறு.

நான் ஒரு பாறையிலிருந்து ரஜினி சாரின் முதுகில் லாகவமாகக் குதித்து உட்காரவேண்டும் என்று சொன்னார் இயக்குநர் எஸ்.பி. முத்துராமன். 'அய்யய்யோ! என்னால முடியாது சார்!' என்று நான் பயந்தபடி சொன்னேன். ஆனால், ரஜினி சாரோ 'பரவாயில்ல. நீங்க ட்ரை பண்ணுங்க' என்று சொல்லி விட்டார்.

அப்படிச் சொல்லிவிட்டாரே தவிர, அந்தக் காட்சியை எடுப்பதற்குள் படாத பாடு பட்டுவிட்டோம். மிகச் சரியாக அவர் முதுகின்மேல் தாவிக் குதித்து உட்காரவேண்டும், இல்லையா? குதிக்கும்போது ஸ்லிப்பாகி நான் விழுந்து விடுவேன். அல்லது பாரம் தாங்காமல் அவர் சரிந்துவிடுவார். அல்லது டிராலி சரியாக வந்திருக்காது. இப்படியே இருபத்தெட்டு டேக்குகள் வாங்கியது அந்தக் காட்சி. அன்றைக்கு ரஜினி சார் ஒன்றுமே சொல்லவில்லை. அடுத்த நாள் ஷூட்டிங் இல்லை. அதனால் அந்த விஷயத்தை நான் அப்படியே மறந்துவிட்டேன்.

ஷூட்டிங்கெல்லாம் முடிந்து ஒரு

நான் இரவுச் சாப்பாட்டை யூனிட்டில் இருந்த எல்லோரும் ஒன்றாக உட்கார்ந்து சாப்பிடவேண்டி வந்தது. அப்போ தெல்லாம், இப்போது போல தயாரிப் பாளருக்குத் தனி இடத்தில் சாப்பாடு, இயக்குநருக்கு வேறு இடம், நடிகருக்கு மற்றொரு இடம் என்பது கிடையாது. சிறிய இடமாக இருந்தாலும் எல்லோ ரும் ஒன்றாக உட்கார்ந்துதான் சாப்பிடு வோம்.

அன்றைக்குத்தான் ரஜினி சார், இயக்குநர் எஸ்.பி. முத்துராமன் சாரிடம் வாயைத் திறந்தார். 'சார்! முதுகுல ஏறச் சொன்னா, இந்த அம்மா என்னை ஒரு வழி பண்ணிட்டாங்க. 'தொப்பு! தொப்பு!'ன்னு முதுகுல ஏறி விழுந்து, மிதிமிதின்னு மிதிச்சிட்டாங்க. இப் பிடியா பெண்டு கழட்டறது?' என்று சொல்லி கலாட்டா பண்ணினார். நான் ஒன்றுமே பேசவில்லை.

**ச**மீபத்தில்கூட மும்பையிலிருந்து வந்திருந்த ஒருவர் கேட்டார்: 'ஏங்க! நீங்க இந்தியில நடிச்ச மூனு படமுமே ஹிட். அப்புறம் ஏன் நீங்க இந்தியில கண்டினியூ பண்ணலை?' இந்தக் கேள்விக்கு நான் சொல்லக்கூடிய ஒரே பதில், 'பிடிக்கவில்லை.' வேறு ஒன்று மில்லை.

இந்தியில் ஒரே ஒரு படம் ஓடிவிட் டாலே, அதை வைத்தே வாழ்நாள் முழுக்கத் தாக்குப் பிடித்து ஓட்டக்கூடிய நடிகர்களும் இருக்கத்தான் செய்கிறார் கள். அப்படி இருக்க, நான் மட்டும் இந்தியில் இருந்து விலகி இருப்பதற்குக் காரணம், அதன் போலித்தனமும் இந்திப்பட நடிகர்களின் டிசிப்ளின் பிடிக்காததும்தான்.

நானும் ரஜினி சாரும் ஒரு இந்திப் படத்தில் நடித்தோம். அதில் இன்னொரு முக்கியமான பாத்திரத்தில் நடித்தவர் பிரபல நடிகர் சத்ருகன்சின்ஹா.

காலையில் ஒன்பது மணிக்கு ஷூட்டிங். நானும் ரஜினி சாரும் ஓட் டலில் இருந்து கிளம்பிப்போய் சரியான நேரத்துக்கு ஸ்பாட்டில் ஆஜராகி விடு வோம். டீ கொடுக்கக்கூட ஆள் இருக்க மாட்டார்கள். நானும் ரஜினி சாரும் உட்கார்ந்து ஏதாவது கதை பேசிக் கொண்டிருப்போம்.

ஒன்பது மணி ஷூட்டிங்குக்கு பத்து மணிக்கு வந்தால் அது 'லேட்'.



* ரஜினி காந்த்

பதினொரு மணிக்கு வந்தால், 'ரொம்ப லேட்.' பன்னிரண்டு மணிக்கு வந்தால்? சத்ருகன்சின்ஹா மாலை நாலரை ம்ணிக் குத்தான் வருவார். வந்ததும் 'என்ன கொஞ்சம் சீக்கிரமா எடுக்கறீங்களா?' என்று கேட்பார். ஆனால் யாரும் கோபிக்கமாட்டார்கள். அது, அங்கிருந்த எல்லோருக்கும் பழகிப் போனதுதான் ஆச்சரியமான உண்மை.

*(ரயில் வரும்)*

எழுத்து வடிவம்: **பாலுசத்யா**



அதே சமயத்தில், கதைகளைப் பற்றி விமர்சனம் எழுதும் பொல்லாத மனிதர்கள் இருக்கிறார்களே, அவர்கள் கதையில் வரும் ஒவ்வொரு சம்பவமும் வாழ்க்கையில் நடைபெறக்கூடியதாக இருக்க வேண்டுமென்று வற்புறுத்துகிறார்கள்.

''அது அப்படி நடந்திருக்க முடியாது.''

''இது இவ்வாறு ஒரு நாளும் நடந்திராது.''

''இந்தச் சம்பவம் இயற்கையோடு பொருந்தியதில்லை.''

''அந்த நிகழ்ச்சி நம்பக் கூடியதன்று''

# அது கதையாகத் தோன்றக்கூடாது!

என்றெல்லாம் எடுத்துக்காட்டி, ''ஆகையால் கதை சுத்த அபத்தம்! தள்ளு குப்பையில்!'' என்று ஒரே போடாய்ப் போட்டு விடுகிறார்கள்.

விமர்சகர்கள் இப்படிச் சொல்கிறார்களே என்பதற்காகக் கதை ஆசிரியர் வாழ்க்கையில் நடைபெறும் சாதாரண நிகழ்ச்சிகளையே அப்பட்டமாக எழுதிக்கொண்டு போனால், படிக்கும் ரசிகர்கள் ''நடை நன்றாய்த்தானிருக்கிறது. போக்கும் சரியாகத்தானிருக்கிறது. ஆனால், கதை ஒன்று மேயில்லையே?'' என்று ஏமாற்றமடைகிறார்கள். முன்னால் அவ்விதம் சொன்ன விமர்சகர்களும் ரசிகர்களுடன் சேர்ந்து கொண்டு, ''உப்பு சப்பு இல்லை. விறுவிறுப்பு இல்லை. இதற்குக் கதை என்று பெயர் என்ன கேடு? தள்ளு குப்பையில்!'' என்று சொல்லிவிடுகிறார்கள்.

***சிறுகதை எழுத்தாளர் கு.அழகிரிசாமியின் 'அன்பளிப்பு' என்ற சிறுகதைத் தொகுப்புக்கு அமரர் கல்கி எழுதிய மதிப்புரை இது.***

**ஒ**ருவன் நம்பத்தகாத நிகழ்ச்சி எதையேனும் கூறினால், ''என்னப்பா கதை சொல்லுகிறாயே?'' என்கிறோம். ''இதென்ன கதையாக இருக்கிறதே'', ''என்னடா, கதை அளக்கிறாய்?'' என்றெல்லாம் அடிக்கடி காதில் விழக் கேட்டிருக்கிறோம். இவற்றிலிருந்து, ''கதை என்றால் எளிதில் நம்பமுடியாத அபூர்வமான நிகழ்ச்சிகளடங்கியதாக இருக்கும்'' என்று எதிர்பார்க்கத் தோன்றுகிறது.

# அன்றும் இன்றும் என்றும்

என் சொந்த அனுபவத்தில் நான் கண்டும் கேட்டும் தெரிந்து கொண்டிருப்பது என்னவென்றால், வாழ்க்கையில் உண்மையாக நிகழும் பல சம்பவங்கள் கதை ஆசிரியர்கள் புனையும் அபூர்வக் கற்பனைகளைக் காட்டிலும் மிக அதிசயமானவை என்பது தான். ஒரு சாதாரண உதாரணத்தைச் சொல்லுகிறேன்:-

''இராமச்சந்திரன் தன் தோழன் முத்துசாமியைத் தேடிக்கொண்டு மயிலாப்பூருக்குப் புறப்பட்டான். முத்துசாமி மயிலாப்பூரில் ஏதோ ஒரு சந்தில் வாடகை வீட்டில் இருக்கிறான் என்று மட்டும் அவனுக்குத் தெரியுமே தவிர, சரியான விலாசம் தெரியாது. அன்றைக்கு மயிலாப்பூரில் அறுபத்து மூவர் உற்சவம் என்பதும் இராமச்சந்திரனுக்குத் தெரியாது. மயிலாப்பூரில் நாலு மாடவீதிகளிலும் ஒரு லட்சம் ஜனங்கள் அன்று கூடி இருந்தார்கள்.

இராமச்சந்திரன், 'இன்றைக்குப் பார்த்து வந்தோமே? என்ன அறிவீனம்! முத்துச்சாமியையாவது இந்தக் கூட்டத்தில் இன்று கண்டுபிடிக்கவாவது?' என்று எண்ணிக் கொண்டு வந்த வழியே திரும்பிப் போகத் தீர்மானித்தான். கூட்டத்தில் புகுந்து முண்டியடித்து அவன் போய்க் கொண்டிருந்தபோது, யாரோ ஒருவன் பேரில் தடால் என்று முட்டிக் கொண்டான். 'அட ராமச்சந்திரா!' என்ற குரலைக் கேட்டு நிமிர்ந்து பார்த்தால், அங்கே சாக்ஷாத் முத்துசாமி நின்றுகொண்டு பல்லை இளித்தான்!''



அமரர் கல்கி

இவ்வாறு ஒரு கதையில் எழுதினால் விமர்சகர்கள் பிய்த்து வாங்கி விடுவார்கள். ''ஒரு லட்சம் ஜனங்கள் இருந்த கூட்டத்தில் இராமச்சந்திரன் முத்துசாமியின் மேலேதானா முட்டிக்கொள்ள வேண்டும்? அது எப்படிச் சாத்தியம்? நம்பக் கூடியதாயில்லை'' என்று ஒரேயடியாய்ச் சாதிப்பார்கள். ஆனால், மேற்கூறியது என் சொந்த அனுபவத்திலேயே நடந்திருக்கிறது. அதைக் காட்டிலும் பன்மடங்கு வியப்பளிக்கக்கூடிய அபூர்வ சம்பவங்களும் நிகழ்ந்திருக்கின்றன. நீங்கள் ஞாபகப் படுத்திக்கொண்டு பார்த்தால் உங்கள் ஒவ்வொருவருடைய அனுபவத்திலும் இம்மாதிரி எத்தனையோ நிகழ்ந்திருக்கும்.

ஆனாலும், அவற்றையெல்லாம் கதைகளில் அப்படியே எழுதினால், ''ஒரு நாளும் நடந்திருக்க முடியாத சம்பவங்கள்'' என்று விமர்சகர்கள் சொல்லுவார்கள். நீங்களும் நானும் அவர்களை ஆமோதித்து, ''கதை இயற்கையாக இல்லை!'' என்று சொல்லிவிடுவோம்.

ஆகவே, கதை எழுதும் ஆசிரியர் கத்தியின் விளிம்பின் மேலே நடப்பதைக் காட்டிலும் கடினமான வித்தையைக் கையாள வேண்டியவராகிறார்.

கதையில் உள்ளத்தைக் கவரும் நிகழ்ச்சிகளும் வர வேண்டும். அதே சமயத்தில் ''இப்படி நடந்திருக்க முடியுமா?'' என்ற சந்தேகத்தை எழுப்பக்கூடிய நிகழ்ச்சிகளையும் விலக்க வேண்டும்.

பிரத்தியட்சமாகப் பார்த்த உண்மையான நிகழ்ச்சிகளாயிருக்கலாம். ஆனால், படிக்கும்போது, ''இது நம்பக் கூடியதா?''

என்று தோன்றுமானால், கதை பயனற்ற தாகிவிடுகிறது.

சுருங்கச் சொன்னால், கதையில் கதையும் இருக்க வேண்டும். அதே சமயத்தில் அது கதையாகவும் தோன்றக் கூடாது!

இம்மாதிரி கதைகள் புனைவது எவ்வளவு கடினமான கலை என்பதை, கதை எழுதும் துறை



ஓரிடத்திலாவது 'இப்படி நடந்திருக்குமா? அது நம்பத்தக்கதா?' என்று ஐயம் தோன்றுவதில்லை. ஆனாலும் கதை என்னமோ நம் கவனத்தைக் கவர்ந்து இழுத்துச் செல்கிறது.

யில் இறங்கி வெற்றியோ தோல்வியோ அடைந்தவர்கள்தான் உணர முடியும்.

இந்த நூலின் ஆசிரியர் ஸ்ரீ கு-அழகிரிசாமி அத்தகைய கடினமான கலையில் அபூர்வமான வெற்றி அடைந்திருக்கிறார். மிக மிகச் சாதாரணமான வாழ்க்கைச் சம்பவங்களையும் குடும்ப நிகழ்ச்சிகளையும் வைத்துக்கொண்டு கதைகள் புனைந்திருக்கிறார். படிக்கும்போது, இது கதை என்ற உணர்ச்சியே ஏற்படுவதில்லை. நம் நண்பர்கள், நம் பந்துக்கள், நமக்கு அக்கம்பக்கத்திலுள்ளவர்கள், நமக்குச் சற்றுத் தூரத்தில் உள்ளவர்கள், நாம் நன்றாகக் கேள்விப்பட்டு அறிந்திருப்பவர்கள் ஆகியவர்களைப் பற்றியே படித்ததாகத் தோன்றுகிறது.

ஓரிடத்திலாவது, ''இப்படி நடந்திருக்குமா? இது நம்பத்தக்கதா?'' என்று ஐயம் தோன்றுவதில்லை. ஆனாலும் கதை என்னமோ நம் கவனத்தைக் கவர்ந்து இழுத்துச் செல்லுகிறது. கதாபாத்திரங்கள் நம் உள்ளத்தை அடியோடு கவர்ந்து விடுகிறார்கள்.

இந்நூலில் உள்ள கதைகளில் நாம் தினந்தோறும் பார்த்துப் பழகியவர்களையே பார்க்கிறோம்; அவர்களுடைய பேச்சுக்களைக் கேட்கிறோம்; அவர்களுடைய இன்ப துன்பங்களில் பங்கு கொள்கிறோம்; அவர்களுடைய பெருமிதத்தில் நாமும் பெருமிதமடைகிறோம்; அவர்களுடைய ஆசாபங்கத்தில் நம் நெஞ்சையும் நெகிழவிடுகிறோம்.

**23.01.1953,**
**அடையாறு**

## ரீடர்ஸ் கார்னர்

அரிஸ்டாட்டிலிடம் ஓர் இளம் தாய் சென்று, "நான் என் குழந்தைக்கு நல்ல பழக்க வழக்கங்களை கற்றுத்தர விரும்புகிறேன். எந்த வயதில் தொடங்கலாம்?" என்று கேட்டாள்.

"குழந்தையின் வயதென்ன?" என்றார் அரிஸ்டாட்டில்.



"ஐந்து வயதாகிறது" என்றாள் அந்தத் தாய்.

"ஐயோ.. உடனே வீட்டுக்குப் போ! ஏற்கெனவே ஐந்து வருஷம் தாமதமாக்கிவிட்டாய்" என்றார் அரிஸ்டாட்டில்.

- அப்துல் காதர், சென்னை - 45

''சொல்லாம கொள்ளாம வந்தாகூட உடனே என் மனைவி காஃபி போட்டு கொடுத்துடுவா.''

''மறைமுகமான தண்டனைன்னு சொல்லுங்க!''

- லலிதா செல்லப்பா

''நைட் வாட்ச்மேன் வேலைக்கு எனக்கு என்ன தகுதின்னு கேட்கறீங்களே... சின்ன சத்தம் கேட்டாக்கூட போதும் சார்... 'பட்'னு முழிச்சுக்குவேன்... அது போதாதா?''

- மா. கண்ணன்





''தூக்கத்துல நடந்த உங்க பையன், கல்யாணத்துக்கு அப்புறம் எப்படி?''

''துக்கத்துல நடக்கறான்!''

- மதுரை பால.கோவிந்தராஜ்

# மூச்சுப் பயிற்சி!

''இழுத்து மூச்சு விடுங்க!''

''எப்படி டாக்டர்?''

''எதிர்கட்சிக்காரன் ஜெயிச்சுட்டா பெருமூச்சு விடுவீங்களே அப்படி...''

- சுதாகர், பெரம்பூர்





''இலவச கைக்குட்டை மக்களுக்கு கொடுத்ததைப் பற்றி எதிர்கட்சி தலைவர்கள் என்ன பேசிக்கறாங்க?''

''வெறும் கண் துடைப்புனு சொல் றாங்க தலைவரே!''

- எஸ்.முகம்மது யூசுப்

# கரையோரக் கதைகள்!

கதைகள் அடங்கிய புத்தகம்தான் என்றாலும் அது கதைப்புத்தகம் அல்ல. கிறிஸ்து பிறப்பதற்கு ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் தொடங்கி இருபதாம் நூற்றாண்டு வரையிலான காலகட்டம் இந்தப் புத்தகத்தில் அடங்கியிருக்கிறது; தனித்தனி கதைகளாக. மகா பண்டிட் என்று அழைக்கப்பட்ட ராகுல்ஜி வீட்டில் அதிகம் தங்கியிருந்ததில்லை. மூன்று ஆண்டுகள் சிறையில் இருந்திருக்கிறார். நாற்பத்தைந்து ஆண்டுகள் ஊர், உலகம் சுற்றியிருக்கிறார். புத்த துறவியாக இருந்திருக்கிறார். பிரிட்டிஷ் எதிர்ப்பாளர். மனித சமுதாயத்தின் மீது அக்கறை கொண்ட தேசியவாதி. பொதுவுடைமை சித்தாந்தத்தில் நம்பிக்கை கொண்ட எழுத்தாளர்.



✱ ராகுல்ஜி




மொத்தம் 150 புத்தகங்கள் எழுதிய ராகுல்ஜி இறந்தது டார்ஜிலிங்கில், 1963ம் ஆண்டு. ராகுல் சாங்கிருத்தியாயன் எழுதிய வால்கா முதல் கங்கை வரை (இந்தியில்) முதலில் வெளிவந்தது 1949ம் ஆண்டு. ஐரோப்பாவின் மிகப் பெரிய கடல், வோல்கா. ராகுல்ஜியைப் பொறுத்தவரை ஐரோப்பாவில் இருந்தும் ஆசியாவில் இருந்தும் வெளியேறிய ஆரியர்கள் வோல்கா நதிக்கரைகளிலும் பிறகு இமயத்திலும் இந்தியக் கண்டத்திலும் குடியேறினார்கள்.

தொடக்கக்கால வாழ்க்கை எப்படியிருந்தது? வேட்டையாடும் மனிதர்களிடம் இருந்து தொடங்குகிறது வாழ்க்கை. மிருகங்களும் பறவைகளும் மனிதர்களும் ஒன்றாக வசித்து வந்தனர். வீடு என்று எதுவும் உருவாகியிருக்கவில்லை. குடும்பம், சொத்து, திருமணம் ஏதுமில்லை.

உயிர் வாழ விலங்குகளை வேட்டையாடியும், விலங்குகளால் வேட்டையாடப்படாமல் காத்துக் கொண்டும் வாழ வேண்டிய நிர்ப்பந்தம். நெருப்பு உருவானது. உடை, பிறகு, வேட்டைக் கருவிகள் பின்னர் வீடு.

இவள் என் பெண், எனக்கு மட்டுமே உரியவள் என்று மனிதன் உரிமை கொண்



டாட ஆரம்பித்தான். சேகரித்த காட்டுப் பொருட்களைச் சேமிக்கக் கற்றுக் கொண்டான். ஆண்கள் வேட்டையாடி னார்கள். பெண்கள் உணவு தயாரித்தார்கள், குழந்தைகளைக் கவனித்துக் கொண்டார் கள். பணிகள் பிரிக்கப்பட்டு மதிப்பிடப் பட்டன. ஒரு பணி உசத்தியானது. மற் றொன்று தாழ்வானது. பலம் கொண்டவன் உயர்ந்தவன். பலமில்லாதவன் அடி பணிந்து போக வேண்டியவன் என்ற மனநிலை ஏற்பட்டது.

ஆகவே, பெண் தாழ்ந்தவள் ஆனாள். ஆகவே, ஆண் உயர்ந்தவன் ஆனான். இனக்குழுக்கள் உருவாக ஆரம்பித்தன. கட வுள்கள் உருவாக்கப்பட்டார்கள். இரவு, மரம், பாம்பு, மின்னல் போன்றவை கட வுள்களாகின. சடங்குகள் ஆரம்பித்தன; கூட சண்டைகளும். மனிதர்கள் தங்களுக் குள் அடித்துக் கொண்டார்கள். நான், என் குடும்பம், என் உடைமை, என் இனம், நீ, உன் குடும்பம், உன் உடைமை, உன் இனம். இருவரில் யார் உசத்தி? பார்த்து விடுவோமா?

ஒரு பக்கம் பொருள் அதிகம் சேர்ந் தது. மற்றொரு பக்கம், வறுமை. ஆண்டான் அடிமை சமூகம் உருப் பெற்றது. இல்லாதவர்கள் இருப்ப வர் முன்னே உடலை வளைத்து, குழைந்து நிற்க வேண்டியிருந்தது. எஜமானன் கட்டளையிடு பவனாக மாறினான். அடி மைகள் எப்படியாவது வாழத்தான் வேண்டி யிருந்தது; இருக்கிறது.

கதை முடியும் 1942ல் பிரிட்டனுக்கு எதிராகப் போராடிக் கொண்டிருக் கிறது இந்தியா. இதன் பொருள், ஆண்டான் அடிமை மனோபாவம் அப்படியொன்றும் பெரிதாக மாறிவிடவில்லை என்பதுதான். மனிதகுல வரலாற்றை நேர்மையாக ஆய்வு செய்யும் எவராலும், ராகுல்ஜியின் இந்த வாதத்தை மறுக்க முடியாது. முன்னேற்றம் என்று நாம் கொண்டாடும் எதுவொன்றும் மனிதனின் அடிப்படை குணாதிசயங்களை மாற்றிவிடவில்லை.

மனிதன் இன்னமும் குகையில்தான் இருக்கிறான். குகையின் வடிவம் மாறி யிருக்கிறது. இருப்பவர்கள் இன்னமும் உலகை ஆண்டு கொண்டிருக்கிறார்கள். இல்லாதவர்கள், அடிபணிகிறார்கள். விலங்குகள் இன்று நம்மை அச்சுறுத்துவ தில்லை. விலங்குகளையும் சேர்த்தே நாம் அச்சுறுத்திக் கொண்டிருக்கிறோம். ராகுல்ஜி கனவு கண்ட பொதுவுடைமைச் சமுதாயம் இன்னமும் உருவாகவில்லை. ஆகவே, இந்தக் கதைகளை மீண்டும் மீண்டும் ஆசையுடன் வாசிக்க வேண்டியிருக்கிறது.

**மருதன்**

அவன் புறப்பட்டுக் கொண்டிருந்தான். எப்படியும் கரியப்பாவையும் அவர் வளர்ப்புப் பெண் வீரம்மாவையும் பார்த்தாக வேண்டும். வீரம்மா அவனுக்குத் தங்கை முறை.

கடைசியாக கரியப்பாவை ஆஸ்பத்திரியில் வைத்துப் பார்த்ததுதான். அவருக்கு உடல்நிலை ரொம்ப மோசமாக இருக்கிறது என்று கேள்விப்பட்டு ஒரு மாதம் ஆகியிருக்கும். வீரம்மா சென்னையில் இருந்தாலும், மேல்மருவத்தூர் அருகிலுள்ள தான் பிறந்த தொழுப்பேடு கிராமத்தில் வைத்து கரியப்பாவைக் கவனித்து வந்தது. 'வானம் இருட்டிக்கிச்சு, மழை வரும்' என்பது முதல் 'ஏதேதோ குடும்ப வேலைகள், எங்க போக முடியுது?' என்பது வரை கரியப்பாவை அடிக்கடி போய்ப் பார்க்க முடியாததற்குப் பல காரணங்கள் கிடைத்துவிட்டன.



அதிலும் நகரத்தில் ஒரு பிள்ளை, ஒரு பெண்டாட்டி, ஒரு அம்மா என்கிற குடும்பத்தை வாழ்வித்தே ஆகவேண்டும் என்று சங்கற்பம் ஏற்றுக்கொண்ட ஓர் அரசாங்க ஊழியன் அவன்.

அவன் குழந்தையாக இருந்தபோது, ''எங்க தம்பி நல்ல தம்பி ஏரடிப்பான் எறப்பு எறைப்பான் நூறு பேரை நொறுக்கி அடிப்பான்...'' பாட்டைப் பாடிக் கொண்டே, இரண்டு கைகளையும் பிடித்து அலக்காகத் தூக்கி சுற்றிச் சுற்றிக் கீழே விட்டு ஐந்து பைசா கொடுத்து தின்பண்டங்கள் வாங்கிச் சாப்பிடச் சொன்ன கரியப்பா.

# காணி நிலம்

## நா.வே. அருள்

ஒன்னுக்குப் போக முடியாமல் அவஸ்தைப்பட்டுக் கிராமத்தில் முடியாமல் போய், கடைசியில் சென்னை கே.எம்.சி. ஆஸ்பத்திரியில் அவரைச் சேர்த்திருந்தது வீரம்மா. அவன் அவரை அப்போது பார்த்ததுதான். அவன் வாங்கிச் சென்ற ஹார்லிக்ஸ் பாட்டிலைத் தடவிப் பார்த்துக் கொண்டே, தன்னிடம் பேசியதை நினைவுபடுத்திக் கொண்டான். டியூப் வழியாக ஒன்னுக்குப் போகிறதென்றும் பிழைப்பது கஷ்டம் என்றும் சொன்னார்கள். டாக்டர்கள் அப்படிச் சொல்லவில்லை.

மனைவி வழியில் தத்தெடுத்து வளர்த்த பெண் வீரம்மாதான் இப்போது அவருக்குச் சகலமும். வீரம்மாளுக்கு இரண்டு பெண்கள்.

கரியப்பா பிரிவுக்கு நஞ்சையில் ஒரு ஏக்கரும் புஞ்சையில் இரண்டு ஏக்கரும்தான் பாட்டன் பூட்டன் காலத்துப் பரம்பரைச் சொத்து. அதைத் தனியாகப் பிரித்து எடுத்துப்

**எப்படியாவது வீரம்மாவைச் சரிக் கட்டி, சித்தப்பாக்கள் திருப்தியடைய வைத்து இந்த பிரச்னைக்குத் தன்னால் ஒரு தீர்வு வரவேண்டும்.**

போக கரியப்பாவும் அவரது பாரியாளான சித்தியும் எத்தனையோ முயற்சிகள் எடுத்துப் பார்த்துவிட்டார்கள்.

''காலமெல்லாம் நமக்கு எதிரியாக இருந்தவனிடம்தான் போவான் இந்தக் கரியன். ஆகாதவனுங்க தூண்டிவிடுறபடி ஆடி, குடும்பக் கௌரவத்தை நாசமா ஆக்கினவ அவன் பொண்டாட்டி. என்னைக்கு

அவளைக் கட்டிக்கிட்டானோ அன்னி லேர்ந்து குலநாசம். கல்யாணத்துக்கு அப்புறம் அவன் குடும்பத்துக்காக என்ன செஞ்சான்? நாத்து புடுங்கினானா? நடவு நட்டானா? ஏரு ஓட்டியிருப்பானா? எறப்பு எறச்சிருப்பானா? கரண்டு பில் கட்டியிருப் பானா? மோட்டார் ரிப்பேருக்கு மொதல் வச்சிருப்பானா? கல்யாணம் ஆச்சோ இல்லியோ வேற போயிட்டான். தனியா பயிரிட்டுக்கிட்டான். சல்லிக்காசு குடும் பத்துக்காகக் குடுத்திருப்பானா? நம்ம புள்ளைங்க எல்லாம் புள்ளைங்க இல்லியா? பொண்டாட்டியோட அக்கா பொண்ணை ரெண்டு வயசுலேயே கொண்டு வந்து வச்சிக்கிட்டு வார்மை கீர்மை எடுத்துக்கினு இருக்கான். குடும் பத்துல கடன் இன்னா கச்சி இன்னான்னு கண்டுக்கிட்டானா? இப்போ இவனுக்கு சரிபாகம் கொடுக்கிறது என்னா நியாயம்?''

கரியப்பாவுக்கு நேர் இளையவரான பிஸ் கோத்து அப்பாவின் பிராது இது. மற்ற தம்பிகளுக்கும் ஏகதேசம் இதே கருத் துத்தான்.

எத்தனையோ பஞ்சாயத்துகள். எத்த னையோ முடிவுகள். சித்தி சங்க சங்கை யாய்க் கேள்வி கேக்கும். 'எங்க பாகத்தை நாங்க விக்குறோம். தடுத்துப் பாருங்க'ன்னு சவால் விடும். பிறகு கொஞ்சம் சமாதானம். மீண்டும் ரகளை. கடைசியில் சித்தியும் செத்துப் போச்சு.



'' அந்தக் காலத்துல மன்னர், புலவர் இருவரும் இம்சைகள்தான்.''

''எப்படி சொல்றே?''

''மன்னர் மக்களை பாடாய் படுத்துவார்; புலவர் பாட்டால் படுத்துவார்.''

- **சென்னிமலை சி.பி.செந்தில்குமார்**

கரியப்பாவுக்கு ரொம்ப முடியாமல் போய் ஒரு மாதம் ஆகியிருக்கும். சென்னையில் தங்கி ஜீவனம் செய்கிற வீரம்மா தான், அவரைக் கீழ்ப்பாக்கம் கே.எம்.சி. ஆஸ்பத்திரியில் சேர்த்துவிட்டது.

''நீ சொன்னாதாம்பா அந்த ஆளு கேப்பாரு. கடைசியா அவர் சொத்துக்கு ஒண்ணரை லட்சம் குடுக்கணும்னு பேச்சு. தம்பிகளையும் வைச்சு முடி வெடுத்ததுதான். ஆஸ்பத்திரிச் செலவுக்கு இருபதாயிரம் குடுத் திருக்கு. அதைக் கழிச்சுக்கிட்டு மீதியை வாங்கிக்கச் சொல்லு. அந்தப் பொண்ணு வீரம் மாவுக்கு ஒரு காணியை எழுதி வைக்கணும்னு புதுசா கதை யைக் கௌப்புறாரு. அந்த ஆளுக்கு மன சாட்சியே இல்லப்பா. அந்தப் பொண்ணு கிட்ட பேசி உங்க அப்பனுக்கு கொடுக் கப்போற ஒரு லட்சம் போக மீதி முப்ப தாயிரத்தை அவ பங்கா குடுத்து சரி பண்ணப் பாரு. நெலத்தை எழுதி வச்சா என்னா ஆகும்னு தெரியுமில்ல? அவன் பொண்டாட்டிகிட்ட பட்டது போறாதுன்னு காலமெல்லாம் அந்தப் பொண்ணுகிட்ட வேற படணுமா? இந்தா இதப்புடி''

பிஸ்கோத்து அப்பா முப்பதாயிரத்தை எடுத்து நீட்டினார். அந்த ரூபாய் நோட்டு களில் ஒருவித வாசம் அடித்தது.

மற்ற சித்தப்பாக்களின் பேச்சைக்கூட

தட்டிவிடுவான். பிஸ்கோத்து அப்பா பேச்சை அவனால் மறுக்க முடியாது. அவர் தோளில் உட்கார்ந்துதான் அவன் உலகத்தைப் பார்க்க ஆரம்பித்தான். 'டின்'னில் பிரிட்டானியா பிஸ்கோத்துகளை வாங்கித் தந்தவர். அவன் வைத்த பெயர்தான் பிஸ் கோத்து அப்பா. இப்போதும் அவரை நினைக்கிறபோது பிரிட்டானியா வாசம் அடிக்கத்தான் செய்கிறது. அவர் பேச்சை அவனால் தட்டமுடியாது.

கரியப்பாவையும் வீரம்மாவையும் பார்க்கக் கிளம்பிக் கொண்டிருந்தான். முப்பதாயிரத்தை எடுத்து பாக்கெட்டில் வைத்துக் கொண்டான்.

புருஷனை இழந்து ரெண்டு புள்ளைங்களோட நிக்கும் வீரம்மா, முப்பதாயிரத்தை ஒத்துக்கொள்ளுமா? நிலம்தான் வேண்டுமென்று அடம்பிடிக்குமா?

முப்பதாயிரத்தைத் தொட்டுப் பார்த்துக் கொண்டான். எப்படியாவது வீரம்மாவைச் சரிக்கட்டி, சித்தப்பாக்கள் திருப்தியடைய வைத்து இந்தப் பிரச்னைக்குத் தன்னால் ஒரு தீர்வு வர வேண்டும் என்று எண்ணினான்.

ஒரு சின்ன அறையில் எல்லா சாமான்களையும் இடுக்கி வைத்தது போக இரண்டு பேர் கால் நீட்டிப் படுக்கலாம். சமையல் முடிந்த பிறகு காலை மடக்கிக் கொண்டு அங்கு ஒருவர் படுத்துக் கொள்ள லாம்.

வாடகை கொடுத்தது போக ஏதோ வயிற்றைக் கழுவிக் கொள்ளலாம். கஷ்ட ஜீவனம்தான்.

தண்ணீர் நிறைந்த பிளாஸ்டிக் குடத்தை இறக்கிவைத்த கையோடு அவனைத் திரும்பிப் பார்த்துத் திகைத்துப் போன வீரம்மா, ''வாங்கண்ணா'' என்று வரவேற்றது. அவனுக்குக் குற்ற உணர்ச்சி. தான் அண்ணனாக நடந்திருக்கிறோமா என்று சட்டென்று நினைத்துப் பார்த்துக் கொண்டான்.

ஒரு மூலையில் கரியப்பா படுத்துக் கொண்டிருந்தார். ஒடுங்கிப் போன உடம்பு. ''வாப்பா'' என்றபடி சிரமப்பட்டு எழுந்து உட்கார்ந்தார். வீரம்மாதான் கைகொடுத்துத் தூக்கிவிட்டது. ஆஸ்பத்திரியில் அப்பாவைப் பார்க்க வந்தபோது, தான் இல்லாமல் போனதற்காக வீரம்மா வருத்தப்பட்டது.




சிறிது நேரம் அமைதியில் கரைந்தது.

''சரிப்பா. அந்த நிலம்...'' என்று அவன் பேச்சை ஆரம்பித்தான்.

''டேய். அவனுங்க எல்லாம் என்னை மோசம் செய்யறாங்க. தோ... காயலான்னு விழுந்துட்டேன். யாரு பார்த்துக்குறான்? ஒரு வாரந்தான் இருக்கும். அகரத்தான் வீட்டுல சாப்பிட்டிருப்பேன். கார் அரிசியை விட பெரிசா இருந்துது. செரிக்கலைன்னு

சொன்னேன். அவ்ளோதான். ஒனக்குப் பொன்னி அரிசி கேக்குதாடான்னு குதிக்க ஆரம்பிச்சுட்டான். எந்தத் தம்பி பொண்டாட்டியும் என்னைக் கவனிச்சுக்க மாட்டா. கொட்டாங்கச்சி கொழம்புக்கு விதியில்ல. அவனுக்கெல்லாம் எதுக்கு என் சொத்து? தோ. வேலையை விட்டுட்டு என்னைக் கவனிச்சுக்குது வீரம்மா. இது இல்லன்னா என் கதி என்னாவறது? இந்தப் பொண்ணுக்கு நான் ஏதாச்சும் பண்ணணுமா இல்லியா? புருசன் வேற செத்துட்டான். ஒரு காணி நெலத்தை அதுக்கு விடச் சொல்லு...'' சத்தம் போட்டுப் பேசியதில் கரியப்பாவுக்கு மூச்சு இறைத்தது.

''சரி, நீ இன்னா சொல்ற வீரம்மா?'' என்றான் அவன்.

''நெலத்தைப் பத்திப் பேசத்தான் இப்போ வந்திருக்கீங்களா?'' பற்று இல்லாமல் விட்டேத்தியாய்க் கேட்டாள். பேச்சில் நிலம் பற்றிய அக்கறை துளியும் இல்லை.

''அண்ணா... நான் ரெண்டு வயசுலேர்ந்து ஒங்க வீட்டுலதான் வளர்ந்தேன். இதுவரைக்கும் இந்த விஷயத்துல எதுனா பேசியிருக்கேனா? எல்லாரும் என்னை ஒதுக்கி வைச்சிருந்தீங்க. புருஷன் செத்தப்போ எடுத்துப் போட யாரு வந்தீங்க? தோ பாருங்க''ன்னு பீரோவைத் திறந்தது வீரம்மா.

''முப்பத்தி ஏழு பொடவைங்க வந்தது. ஊரு ஒறவுல்லாம் வந்துச்சு. அதெல்லாம் எனக்குப் பெரிசு இல்ல. ஒங்க ஒரு பொடவை கோடி வரலையேன்னு என் நெஞ்சு துடிச்சதை எங்க போயிச் சொல்லுவேன்? எங்க அம்மா இருந்தா விட்டிருப்பாங்களா? போங் கண்ணா நீங்களும் ஒங்க காணியும்...''

முந்தானையால் துடைத்துவிட்டுக் கொண்டே, தேம்பித் தேம்பி அழுத வீரம்மாவின் கண்களில் கண்ணீர் வழிந்து கொண்டேயிருந்தது.

வந்தவன் கண்களிலும் முதல் முறையாய் கசியத் தொடங்கியது கண்ணீர்.

### ஆதியின் பாதி!

படப்பிடிப்புக்கு ஒழுங்காக வரமாட்டார். அப்படி வந்தாலும் சரியானபடி ஒத்துழைக்க மாட்டார். அவரைப் போட்டு படம் எடுப்பதற்குப் பதிலாக 'பிரச்னையை'ப் போட்டு படம் எடுக்கலாம் -இவை மீரா ஜாஸ்மின் மீது, கோடம்பாக்கத்து டைரக்டர்ஸ், தயாரிப்பாளர் அடுக்கும் குற்றச்சாட்டுகள். ஆனால், அவர் தேசிய விருது பெற்றிருந்தாலும் கஜன் என்ற புது முகத்துடன் 'ஆதிநாராயணா' படத்தில் ஜோடி போட்டிருப்பது எல்லோரையும் ஆச்சர்யப்பட வைத்திருக்கிறது. பாக்ஸ் ஆபீஸ் புரொடக்ஷன்ஸ் எம்.பாலாஜி தயாரிக்க, எழுதி இயக்கும் ஜெ.வெற்றிவேந்தன் நம்மிடம் பேசினார்.

''மேலே சொன்ன எந்தக் குற்றச்சாட்டையும் சொல்ல முடியாத அளவுக்கு பொறுப்போடு நடந்து கொண்டார் மீரா. இவ்வளவு நல்ல பெண்ணை ஏன் எல்லாரும் அவதூறு பேசுகிறார்கள் என்று புரியவில்லை. படத்தோட ஹைலைட்ஸ் என்ன என்று யாராவது கேட்டால் மீரா ஜாஸ்மின் நடிப்பதுதான் என்பேன். புதுமுகம் கஜன் நடிப்பதற்கு சிரமப்பட்ட நேரத்தில் தைரியம் கொடுத்து மீரா அவரைத் தேற்றிய விதம் பாராட்டுக்குரியது. வாய்ப்புக்குக் கிடைத்தால் என் அடுத்த படத்திலும் மீரா ஜாஸ்மின்தான் ஹீரோயின்'' என்கிறார்.

- அனிதா



# காதல்னா சும்மா இல்ல




**கதை:** காதலியைத் தேடிச் செல்லும் காதலனுக்கு வழி நெடுக வாழ்க்கைக் குறித்தப் படிப்பினைகளைச் சொல்லி, கடைசியில் காதலியோடு கரம் கோக்க வைக்கும் கதை.

**ப்ளஸ்:**

★ கமாலினி முகர்ஜியின் தேர்ந்த நடிப்பு

★ கலகலப்பூட்டும் எம்.எஸ். பாஸ்கர்

★ மணிசர்மாவின் இசை

★ கஞ்சா கருப்புவின் காமெடி

★ கண்களுக்குள் குளிர்ச்சி பரப்பும் ஒளிப்பதிவு

★ காதோடு காதல் ரகசியம் பேசும் பாடல்கள்

★ கவிதையாய் நகரும் திரைக்கதை

★ நாசரின் பொறுப்பான நடிப்பு

**மைனஸ்:**

★ கதாநாயகன்களாக, ரவிகிருஷ்ணா, சர்வத் இருவரும் சோபிக்கவில்லை.

★ சொதப்பலான படத்தொகுப்பு

★ மெதுவாக நகரும் கதையில் ஹீரோ காட்டும் ஹீரோயிஸம்

★ தேவையில்லாமல் வந்து போகும் நக்ஸலைட்ஸ்

★ எப்போதும்போல கேலிக்குள்ளாக்கப்பட்டிருக்கும் கோடம்பாக்கத்து போலீஸ்

★ எகிறி அடிக்க வேண்டிய நடிப்பில், அடங்கியே திரியும் ஹீரோ சர்வத்

★ யூகிக்க வைக்கும் ரயில்வே ஸ்டேஷன் க்ளைமாக்ஸ்

★ ஏமாற்றம் தரும் இயக்குநர் இளங்கண்ணன்

காதல்னா சும்மா இல்ல - சொதப்பல்.

– மகிமைராஜன்

# சூடான மொளகா பஜ்ஜி!

(**மா**டசாமி, மயில்சாமி இருவரும் கிராமத்தில் இருந்து சென்னைக்கு வந்து, லாட்ஜில் ரூம் எடுத்து தங்குகிறார்கள்)

**மயில்சாமி:** மாப்ளே எப்படியோ சென்னைக்கு நல்லபடியா வந்து சேர்ந்துட்டோம்.

**மாடசாமி:** ஆமா... மச்சான்... இந்த மாசம் வந்தது ரொம்ப நல்லதாப் போயிடுச்சு. பார்க்கிற துக்கு நெறைய விஷயம் இருக்கு.

**மயில்சாமி:** பின்ன... பொஸ்தகக் கண் காட்சி இருக்கு. சங்கமம்னு ஆட்டம் பாட்டம் கொண்டாட்டம் இருக்கு. சுற்றுலா பொருட்காட்சி... சர்க்கஸ்சு... இசை விழான்னு நெறைய இருக்கே...



**மாடசாமி:** ஏ... மாப்ளே இசை விழாங்கறாங்களே.... சினிமா பாட்டு போடுவாங்களா?

**மயில்:** சினிமா பாட்டில்ல... சங்கீதம்..

**மாடசாமி:** ஓ... இந்த ஒரே எழுத்தைத் திரும்பத்திரும்ப சொல்லுவாங்களே... பஜனை பாடுற மாதிரி...

**மயில்:** அதேதான்... சரி முதல்ல எந்த விழாவுக்குப் போகலாம் அதைச் சொல்லு...

**மாடசாமி:** ஒரே நேரத்துல இவ்வளவும் நடக்கறதால எதுக்குப் போறதுன்னு ஒரே குழப்பமா இருக்கு.

**மயில்:** முதல்ல அறிவுக்குத் தீனி போடுவோம்.

**மாடசாமி:** அப்படின்னா... வாங்கித் திங்கற பொருளா?

**மயில்:** அதில்லடா பொஸ்தகக் கண்காட்சிக்குப் போலான்னு சொல்றேன்.

**மாடசாமி:** அங்க போனா ஏதாச்சும் வாங்கணுமே...

**மயில்:** சூடா மொளகா பஜ்ஜி போடுவாங்க. அதை வாங்கலாம். ஆமா... பக்கத்துவீட்டு மாமி ஏதோ வாங்கச் சொன்னாங்களே என்ன அது?

**மாடசாமி:** செலவில்லாம சமைப்பது எப்படி?ன்னு புத்தகம் வாங்கச் சொன்னாங்க... ஆனா மச்சான் முதல்ல சங்கமம் விழாவுக்குப் போலாம்னு தோணுது. அங்க கம்மங்கூழு, கேழ்வரகு தோசையெல்லாம் தருவாங்களாம்.

**ஜாலி ஸ்டோர்ஸ்**

# உத்தமபுத்திரன்

**மயில்:** அதையெல்லாம்விட... இதுவரைக்கும் நாம பார்க்க முடியாம இருக்கிற சங்கீதக் கச்சேரிக்குப் போனா தேவலைன்னு தோணுது.

**மாடசாமி:** பேசாம... சர்க்கஸ்க்குப் போலாமே. அங்க ஆடு, மாடு, குரங்கெல்லாம் கிரிக்கெட்டு ஆடுதாம். அப்படியே கடலையும் பாக்கணும்.

**மயில்:** அதுக்கு நம்ம காட்ல வெளையற செடியைப் பிடுங்கியே கடலையைப் பார்க்கலாமே... இவ்வளவு தூரம் வரணுமா?



**மாடசாமி:** கடலை... இல்லய்யா... கடலு... சினிமாவுல பாட்டு ஸீன்ல காட்டுவாங்களே அது.

**மயில்:** ஓ... அதுவா... சரி சரி.. முதல்ல நாம எது எது எங்கெங்கே நடக்குதுன்னு கேட்டுத் தெரிஞ்சுக்குவோம். அதுக்கப்புறம்... எதெல்லாம் பாக்கறதுன்னு முடிவு பண்ணுவோம்.

**மாடசாமி:** ஆனா... இந்த எல்லா விழாவையும் விடாம பார்த்துடணும்.

**மயில்:** பின்னே... பார்க்காமப் போறதுக்கா பஸ் ஏறி செலவு பண்ணிட்டு இம்புட்டுத் தூரம் வந்திருக்கோம். சரி... சரி கிளம்பற வழியைப் பாரு...

**மாடசாமி:** இன்னொரு ஐடியாவும் இருக்கு. நமக்குள்ள எதுக்கு முதல்ல போறதுன்னு சண்டை வராம இருக்க, எல்லா நிகழ்ச்சியையும் சீட்டுல

எழுதிப் போட்டு எடுப்போம். எது முதல்ல வருதோ அதுக்கே போவோம் சரியா?

**மயில்:** சரி... ஆனா நான்தான் சீட்டு எடுப்பேன்.

**மாடசாமி:** இல்ல நான்தான் ஐடியா சொன்னேன். அதனால நான்தான் எடுப்பேன்.

**மாடசாமி:** இப்படியே... நாம சண்டை போட்டுக்கிட்டே இருந்தோம்னா அவ்வளவுதான் முதல்ல நீ குளிச்சிட்டு ரெடியாகு..

**மயில்:** காலைலயே ரெடியாகி என்ன பண்றது. பஸ்ல வந்த அலுப்புத் தீர






கொஞ்ச நேரம் தூங்கிட்டு மதியமாப் போவோம்.

*(இருவரும் குளித்து விட்டு படுத்துத் தூங்குகிறார்கள். நன்றாக அசந்து தூங்கிக் கொண்டிருக்க... திடீரென்று கதவு தட்டும் சப்தம் கேட்க இருவரும் பதறிப் போய் எழுந்து, கதவைத் திறக்கின்றனர். வெளியே ரூம் பாய் நின்று கொண்டிருக்கிறான்.)*

**ரூம்பாய்:** ஹலோ... இன்னும் எத்தனை நாளைக்கு ரூம் வேணும்னு சொல்லுங்க..

**மாடசாமி:** *(புரியாமல்)* யோவ்... இன்னைக்குத்தானேய்யா வந்திருக்கோம். அதுக்குள்ள வந்து கேட்டின்னா எப்படி?

**ரூம்பாய்:** என்னது இன்னைக்குத்தான் வந்தீங்களா... ஹலோ... நீங்க வந்து நாலு நாளாச்சி கதவையே தெறக்காம அப்படி என்னய்யா பண்ணிட்டு இருந்தீங்க?

**மயில்:** *(அதிர்ச்சியுடன்)* என்னது நாலு நாளா?

**ரூம்பாய்:** ஆமா... எதுக்கு மெட்ராஸ் வந்தீங்க...

**மாடசாமி:** சங்கமம் விழா, பொஸ்தகக் கண்காட்சி, சங்கீத விழா எல்லாத்தையும் பார்க்கலாம்னு வந்தோம்.

**ரூம்பாய்:** அடப்பாவிங்களா... எல்லாம் நேத்தோட முடிஞ்சு போச்சு.

**மயில்:** என்னது எல்லாம் முடிஞ்சு போச்சா... அடடா எல்லாம் வீணாகிப் போச்சே...

**மாடசாமி:** எல்லாம் பிளான் பண்ணிட்டு இப்படித் தூங்கிப் போயிட்டமே...

**மயில்:** வரும்போதே ஒரு சேவலையும் கொண்டு வராமப் போயிட்டமே...

**ரூம்பாய்:** சேவலா எதுக்கு?

**மாடசாமி:** ரூம்ல ஒரு சேவலைக் கட்டிப் போட்டிருந்தா கூவி எழுப்பிவிட்டிருக்குமே...

**ரூம்பாய்:** எழுப்பறதுக்கு சேவலா! *(என்று வாய்பிளந்தபடி நிற்க, மாடசாமி, மயில்சாமி இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் சோகத்துடன் பார்த்துக்கொள்கின்றனர்.)* ●

# மந்திரச் சொல்

# வீரத் துறவி

சுவாமி விவேகானந்தர்

'காட்டுமிராண்டிகளே இந்தியாவில் வாழ்கிறார்கள்' என்று நினைத்த மேலை நாடுகளின் எண்ணத்தை மாற்றியமைத்த மகாபுருஷர் சுவாமி விவேகானந்தர்.

1863ஆம் ஆண்டு ஜனவரி 12ஆம் தேதி கல்கத்தாவில் பிறந்த விவேகானந்தரின் வாழ்க்கை அர்த்தச் செறிவு மிகுந்தது. தத்துவங்களை உள்வாங்கி - அதன் பொருட்டுச் சொல்லப்பட்ட கதைகளை விலக்கி, உபதேசித்த துறவு அவருடையது.

'உலகம் ஒரு குடும்பம்' என்கிற வேதத்தின் குரலை, 'சகோதர சகோதரிகளே' என்ற சிகாகோ மாநாட்டு அழைப்பின் மூலம் வெளிப்படுத்தி, உலகத்தின் கவனத்தை ஈர்த்தவர் சுவாமி விவேகானந்தர்.

சாஸ்திரங்களைப் படிப்பதும், தத்துவங்களை உபதேசிப்பதுமாக மட்டுமே அமைந்ததல்ல அவருடைய வாழ்க்கை. 'இறைவனே அனைத்துமாக இருக்கிறான்' என்ற வேதத்தின் தத்துவத்தை - வார்த்தைகளாக மட்டுமே படிக்காமல் வாழ்க்கையாகவும் பார்த்தார்.

ஏழை எளியவர்கள், ஒதுக்கப்பட்டவர்கள், கல்வியறிவு இல்லாதவர்கள் ஆகிய பாமர மக்கள்மீது பெருங்கருணை கொண்டிருந்தார் அவர். ''இந்தப் பாமர மக்களுக்கு சிறந்த கல்வி, நல்ல உணவு போன்ற வசதிகளை அளித்து நன்றாகக் கவனிக்க வேண்டும். அவர்கள்தான் உழைத்து வரியாகப் பணம் தருகிறார்கள்; ஆலயம் எழுப்புகிறார்கள். ஆனால், நடைமுறையில் அவர்கள் அடிமைகளாகவே இருக்கின்றனர்.

இந்தியாவை முன்னேற்ற விரும்பினால், இந்தப் பாமர மக்களுக்காக அவர்களின் முன்னேற்றத்துக்காக உழைத்தாக வேண்டும்'' - இவை சுவாமி விவேகானந்தரின் வார்த்தைகள்.

விவேகானந்தர் துறவிதான். ஆனால், அந்தத் துறவு, தாம் அடைந்த ஞானத்தையும் அருள் நிலையையும் வெளிப்படுத்திப் பிரமிப்பூட்டுவதல்ல. முழுக்க முழுக்க தேசபக்தியும், சமூகத்தின் மேம்பாடு பற்றிய அக்கறையும் கொண்ட அரும் தொண்டரின் எச்சரிக்கைக் குரல்! 'அன்பே சிவம்' என்ற திருமூலரின் குரலை எதிரொலிக்கின்றன சுவாமிஜியின் சொற்களும்:

''எவனுடைய இதயம் ஏழைகளுக்காக இரத்தம் வடிக்கிறதோ, அவனே மகாத்மா; மற்றவர்கள் துராத்மாக்கள்!''

-இது துறவியின் குரலாக மட்டுமல்ல; சமூக அக்கறைமிக்க ஒருவரின் குரலாகவும் எதிரொலித்துக் கொண்டிருக்கிறது.

**- ராகவன்**

சின்னச் சின்ன சந்தேகம்



"நாட்டுக்கு நுழைவாயின் பாதுகாப்பு எவ்வளவு முக்கியமோ அவ்ளோ முக்கியம் மனித உடலுக்கு வாய். நுழைவாயிலில் கேடயம் தாங்கி பாதுகாக்கும் வீரர்களுக்கு ஒப்பானவை வாயிலிருக்கும் பற்கள். அந்த வீரர்களின் பாதுகாப்பு அல்லது ஆரோக்கியம் கெட்டுப் போனால் உள்ளுக்குள் என்ன விபரீதம் நிகழும் என்பதை நான் சொல்லித் தெரிய வேண்டியதில்லை. ஒரு நல்ல மனிதனுக்குச் சொல் மட்டுமல்ல பல்லும்கூட முக்கியம்தான்" சற்று சுவாரஸ்யமாகவே பேசுகிறார் தி.நகர் J.G.H.R. டோட்டல் டெண்டல் கேரின் பல் மருத்துவர் ஹரிராஜன். அவரிடம் பல்பாதுகாப்பு மற்றும் ஆரோக்கியம் குறித்தான சில அடிப்படையான கேள்விகளை முன் வைத்தோம்...

**அடிக்கடி பற்பசை மாற்றினால் ஆபத்தா?**

"கண்டிப்பாகத் தவறு கிடையாது. ஏனெனில், எல்லா டூத் பேஸ்ட்களிலுமே உடலின் ஆரோக்கியத்தைக் குறிப்பாக பற்களின் ஆரோக்கியத்தைக் கெடுக்காத அளவிலேயே மூலப் பொருட்கள் கலக்கப்பட்டிருக்கும். இந்தியன் டெண்டல் அசோஸியேஷன்ஸ் மற்றும் அமெரிக்கன் டெண்டல் அசோஸியேஷன்ஸ் ஏற்படுத்திக் கொடுத்த அளவுகோலின்படிதான் பற்பசைகள் தயாரிக்கப்படுகின்றன. தங்கள் பிராண்ட் பற்பசைகள் அதிக அளவில் விற்பனையாக வேண்டும் என்பதற்காக சில கம்பெனிகள்... பற்பசையின் நிறம்... மணம்... ஆகியவற்றில் சில மேஜிக்களைச் செய்யலாம். அடிப்படையில் எல்லாம் ஒன்றே."

* ஹரிராஜன்



**பெரியவர்கள் பயன்படுத்துவதை குழந்தைகளும் பயன்படுத்தலாமா?**

"குழந்தைகள் பயன்படுத்தும் டூத் பேஸ்ட்டுகளில் ஃப்ளூரைடு கண்டன்ட்

# பற்பசையை அடிக்கடி

கொஞ்சம் அதிகமாக இருக்கும். காரணம், அவை சொத்தைப் பல் ஏற்படாமல் வழி வகை செய்யக்கூடியவை. பெரியவர்கள் பயன்படுத்தும் டூத் பேஸ்டில் அவற்றின் சதவிகிதம் கொஞ்சம் கம்மி. வேறெந்த வித்தியாசமும் இல்லை.''

**துர்நாற்றத்தை உணர முடியுமா?**

''யாருடைய வாய் துர்நாற்றம் வீசுகிறதோ, அவரால் அந்தத் துர்நாற்றத்தை உணர முடியாது. வாயில் வீசும் துர்நாற்றத்தை வைத்தே வயிற்றில் இருக்கும் பிரச்னையைக் கண்டறியலாம். இன்னும் குறிப்பாகச் சொல்லவேண்டுமெனில், பற்கள், ஈறுகள், நாக்கின் அடிபுறம்... ஆகியவற்றில் தோன்றக்கூடிய அறிகுறியை வைத்தே உடலில் ஏற்படக்கூடிய நோயின் தன்மையை அறியலாம். உதாரணத்துக்கு மஞ்சள் காமாலை ஏற்பட்டால் முதலில் நாக்கின் அடிப்புறம்தான் மஞ்சளாகும்.''

**சிறு குழந்தைகளுக்கும் ரூட் கெனாலா? (Root Canal)?**

''பால் பற்களின் முக்கியமான வேலையே நிரந்தரமான பற்கள் முளைப்பதற்கான வழியை ஏற்படுத்திக்கொடுப்பதுதான். குறித்த காலத்துக்கு முன்பே பால் பற்கள் விழுகிறபோது, நிரந்தரமான பற்கள் உரிய இடத்தில் முளைப்பதற்கு வழி தெரியாமல் கோணல்மாணலாக முளைக்கின்றன. ரூட் கேனால் செய்யும்போது இந்த அசௌகர்யம் முற்றிலும் தவிர்க்கப்படுகிறது.''

**கால்ஷியம் மாத்திரை அவசியமா?**

''பொதுவாகவே மனிதனுக்குச் சிறு குழந்தைப் பிராயத்திலும், முதிய பருவத்திலும் கால்ஷியம் அதிகமாகத் தேவைப்படும். குழந்தையின் பற்கள், எலும்பு ஆகியவை வலுப்பெற இவை உதவும். அதேபோல, முதிய பருவத்தில் எலும்புத் தேய்மானம் பற்களின் தேய்மானம் போன்றவற்றிலிருந்து தற்காத்துக்கொள்ள கால்சியம் மாத்திரைகள் பயன்படும். மற்றபடி அளவுக்கு மிஞ்சினால் கால்ஷியமும் நஞ்சுதான்.''

**உப்பு நல்லதா?**

''உப்பைக் கொண்டு பல்தேய்த்தால் ஈறுகள் மிகவும் மோசமாகப் பாதிக்கப்படும். இதனால் பற்களின் வேர்கள் வலுவிழக்கும்.''

**ஈறு மசாஜ்?**

''பல் தேய்த்து முடித்தபின் ஈறு மசாஜ் அவசியம். அழுத்திக்கொடுக்கப்படும் ஈறுகளுக்கு ஆயுள் அதிகம்.''

**- மகிமைராஜன்**



18 ஸ்ரீ லலிதா

மூன்றாம் பாகம்

# தேவியின் தாம்பூலச் சிறப்பு!

**காத்யாயனி** - இது ரொம்ப அழகான திருநாமம். காத்யாயன முனிவரின் மகளாகத் தோன்றினாள் அம்பாள்; அதனால் காத்யாயனி. காத்யாயன மஹரிஷி தவம் பண்ணினாராம் - அம்பாளே வந்து தமக்கு மகளாகப் பிறக்கவேண்டும் என்று.

எப்படி தக்ஷ பிரஜாபதி ஆசைப்பட்டார்? யாகம் பண்ணி, தவம் பண்ணித்தான் அம்பாள், தமக்கு மகளாகப் பிறக்க வேண்டும் என்று கேட்டார் அல்லவா? அதனால்தான் அவள் தாக்ஷாயனியாக வந்து பிறந்தாள்.

## ஓட்யாண பீடத்தில் உறைபவள்

தக்ஷனுக்கு இரண்டு ஆசைகள் - ஒன்று, அம்பாள் தனக்கு மகளாக வந்து பிறக்கவேண்டும். அப்போது தான் சிவப்பரம் பொருள் தனக்கு மாப்பிள்ளையாக இருக்க முடியும் - இது இரண்டாவது ஆசை! ஆனால், என்றைக்கு சிவப்பரம்பொருள் தனக்கு மாப்பிள்ளை என்று நினைத்தாரோ; யாருக்கும் நிகரற்றவராக, எல்லோருக்கும் மிக்கவராக இருக்கக்கூடிய அந்த சிவபெருமான் தனக்கு மாப்பிள்ளை; அவருக்குத் தாம் மாமனார் என்கிற எண்ணத்தினால் வேறுவிதமான அகங்காரம் வந்தது; மமகாரம் வந்தது; அதனால்தான் பிரச்னையே வந்தது!

ஆனால், ஆரம்பத்தில் தக்ஷ பிரஜாபதிக்கு என்ன ஆசை? அம்பாள் தனக்கு மகளாக வந்து பிறக்க வேண்டும்! தாக்ஷாயனி வந்து பிறந்து அந்த ஆசையைப் பூர்த்தி செய்தாள். அதுபோல் காத்யாயன மஹரிஷியின் ஆசையைப் பூர்த்தி செய்ய, காத்யாயனியாக வந்து பிறந்தாள்.

ஒவ்வொரு ஸ்திதியிலும் அம்பாள் எவ்வாறு இருக்கிறாள் என்று ஏற்கெனவே சில திருநாமங்களில் பார்த்தோம். **ஓட்யாண பீட நிலையா** என்று ஒரு திருநாமம் வந்தது. ஓட்யாண பீடத்தில் இருக்கக்கூடிய அம்பாளுக்கு, காத்யாயனி என்று பெயர். காமரூப பீடத்தில் இருக்கக்கூடிய அம்பாள் காமாக்யா; பூர்ணகிரி பீடத்தில் இருக்கக்கூடியவள் பூர்ணேசுவரி; ஜாலந்தர பீடத்தில் இருக்கக்கூடியவள் சண்டி. ஜலந்தர் என்று நாம் குறிப்பிடும் ஜாலந்தர், சண்டிகருக்குக் கொஞ்சம் பக்கத்தில்தான் இருக்கிறது. இதுபோல் ஓட்யாண பீடத்தில் இருக்கக்கூடிய அம்பாளுக்கு காத்யாயனி என்று திருநாமம். அப்படி இருக்கக்கூடியவள் பக்தர்களுடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்வாள். எவ்வாறு? காத்யாயன மஹரிஷியின் ஆசையைப் பூர்த்தி செய்ய அவருக்கு மகளாகப் பிறந்தாளே! அந்த மாதிரி பக்தர்களின் ஆசைகளை நிறைவேற்றுவாள்.

இந்தத் திருநாமத்துக்கு இன்னொரு அர்த்தமும் உண்டு. க-கஸ் என்ற பதத்துக்கு பிரம்மா என்ற ஒரு பொருள் உண்டு. பிரம்மா என்ற பொருளே எப்படி வந்தது என்றால், தாங்குதல் தன்மை என்கிற அர்த்தத்தில் வந்தது. இந்தப் பூமியைத் தாங்கிக்

சுதா சேஷய்யன்

கொண்டிருப்பவள் அம்பாள் என்பதனாலே உலகத்தைத் தாங்கக்கூடியவளாக, ஜகத்தைத் தாங்கக்கூடியவளாக இருப்பவள் காத்யாயனி.

### மான்விழியாள்

**காலஹந்த்ரீ**- காலத்தை வெல்லக்கூடியவள்; அதன் மூலம் பக்தர்களை ரக்ஷிப்பவள். கால அதீத நிலையை அவள் பக்தர்கள் அனுபவிக்கிறார்கள்.

**கமலாக்ஷநிசேவிதா**- தாமரைக் கண்களையுடைய மஹாவிஷ்ணுவினால் ஸேவிக்கப்படக்கூடியவள்.

**ம்ருகாக்ஷீ**- ம்ருக என்றால் மான். மானின் கண்களைக் கொண்டவள். ஏற்கெனவே, அவள் **சலன்மீனாப லோசனா** என்று சொல்லியாயிற்று. இங்கு மானின் கண்கள்! சற்றே மருட்சி பொருந்திய விழிகளை உடையவள்.

**மோஹினீ**- பக்தர்களின் மோகத்தை எல்லாம் தீர்ப்பவள்.

**முக்யா** - முதன்மை ஸ்தானத்தில் இருக்கக்கூடியவள்.

### தேவர்கள் தேடிய பிரசாதம்

**தாம்பூல பூரித முகீ** - அம்பாளுடைய தாம்பூல விசேஷத்தை எல்லா மகான்களும் ரொம்ப சிறப்பித்துச் சொல்லியிருக்கிறார்கள். அந்தத் தாம்பூலம் கிடைக்கப்பெற்றவர்கள் மிகப் பெரிய அறிஞர்களாக உருவாவார்கள். கொஞ்சம் கிடைத்தாலே போதும்! அதனால்தான் ஆசார்யர் ஆதி சங்கரர் பாடுகிறபோது, எல்லோரும் அந்தத் தாம்பூலத்தைப் பெற ஓடி வந்தார்கள் என்பார். ஆசார்யார் அந்தக் காட்சியை எப்படிப் பார்த்தார் என்பதை, நாம் நமது மனக்கண்ணில் மீண்டும் ஓட்டிப் பார்த்தாலே ரொம்ப அழகு.

தேவர்களுக்கும் அசுரர்களுக்குமான சண்டை முடிந்தது. அந்த யுத்தம் முடிந்ததும், தேவசேனாபதியாக இருக்கக்கூடிய முருகனும் தேவேந்திரனும் உள்பட எல்லோரும் நேரே ஓடி வந்தார்கள். எங்கே ஓடி வந்தார்கள் என்றால், அம்பாளுடைய சிந்தாமணி கிருஹத்துக்கு.

முருகனுக்கே தேவசேனாபதி என்று ஒரு திருநாமம் உண்டு. தெய்வயானையை மணந்ததாலும் இப்பெயர்; தேவர்களுடைய ஸேனைக்கு அதிபதியானவர் என்பதாலும் இப்பெயர்.

யுத்தத்துக்குப் போகிறபோது அஸ்திரம் முக்கியம். கவசம் முக்கியம் என்பதையெல்லாம் முன்பே பார்த்தோம். அந்த அஸ்திரமாகவும் கவசமாகவும் அம்பிகையே இருந்து அருள்கிறாள் என்பதை அனுபவித்தோம். இங்கே,தேவாஸுர யுத்தம் முடிந்து ஓடிவரும் தேவர்கள், கவசத்தைக்கூட நீக்காமல், தலைக் கவசத்தை மட்டும் கழற்றிக் கையில் வைத்துக் கொண்டு ஓடி வருகிறார்கள். சண்டையெல்லாம் முடிந்து பார்த்தபோது, நேரம் ஆகிவிட்டது. ஆகவே, அவசர அவசரமாக ஓடிவருகிறார்கள். எதற்கு நேரம் ஆகிவிட்டது? அம்பாளுடைய கிருஹத்தில் நைவேத்யத்துக்கான நேரம்! அந்த நைவேத்யம் முடிந்துவிட்டதா என்று கேட்டுக்

**சிவன் கோயில் கணக்கு-வழக்கு பூராவும் வைத்திருப்பவர் சண்டிகேசுவரர்**

கொண்டே வந்தார்கள். அவர்கள் வந்தபோது அம்பாள் தாம்பூலம் தரித்துக் கொண்டிருந்தாள் - நைவேத்யம் முடிந்து, உணவருந்திய பிறகு தரிக்கும் தாம்பூலம்.

இந்த தேவர்கள் உள்ளே வருகிறபோது அந்தத் தாம்பூலப் பிரசாதம் வைக்கப்பட்டிருக்கிறது.

### சண்டிகேசுவரர்

அம்பாளுக்கும் சிவப் பரம்பொருளுக்

கும் நைவேத்யம் செய்யப்பட்ட தாம்பூலப் பிரசாதம் முதலில் எங்கே போக வேண்டும் என்றால், அந்த நிர்மால்ய பிரசாதம் சண்டிகேசுவரருக்குத்தான் போக வேண்டும். அதனால்தான் சண்டிகேசுவரர் நிர்மால்ய வாசலில் அமர்ந்திருப்பார். அவர் எப்போதும் தியானத்தில் இருப்பார். ஆனாலும் அவருக்கு ஞானதிருஷ்டி உண்டு என்பதால், அதன் மூலம் யார், வருகிறார்கள் - போகிறார்கள் என்பதெல்லாம் அவருக்கு நன்கு தெரியும்.

நாம் நம் வருகையை உணர்த்த அவர் அருகே போய் கைதட்டுவோம். அல்லது, அவரது தியானத்தைக் கலைக்க வேண்டாம் என்ற எண்ணத்தில் நமது ஆடையிலிருந்து ஒரு நூலை எடுத்து, அவர் அருகே போடுவோம். இதெல்லாம் அவசியமேயில்லை. கோயிலை நாம் சுத்தப்படுத்துவதற்குப் பதிலாக நூலைப் பிய்த்துப் போட்டு குப்பையாக்குகிறோம்! ஞான திருஷ்டியைக் கொண்டே, யார் வந்தார்கள் - போனார்கள் என்ற விவரக் கணக்கை அவர் பெற்று விடுவார். சிவன் கோயில் கணக்கு - வழக்கு பூராவும் வைத்திருப்பார்!



அப்படிப்பட்ட சண்டிகேசுவரருக்கு உரிய நிர்மால்ய பிரசாதம் அங்கே, சிந்தாமணி கிருஹத்தில் காத்திருந்தது. அதைத் தாண்டி ஓடினார்கள் இந்திரனும், தேவ சேனாபதியும், தேவர்களும்.

இதற்கு என்ன அர்த்தம்? சண்டிகேசுவரரிடம் நிர்மால்ய பிரசாதம் வந்தாயிற்று என்றால், மற்றவர்கள் அதைப் புசிக்கலாம் என்று அர்த்தம். ஆனால் தேவர்கள் அதைத் தாண்டி அம்பாளின் சன்னிதானத்துக்கு ஓடினார்கள். அம்பாள் தாம்பூலம் தரித்துக் கொண்டிருந்தாள். அந்தத் தாம்பூலம் தங்களுக்கு வேண்டும் என்பதற்காக ஓடினார்கள். தலைக்கவசத்தை மட்டும் எடுத்து, கையில் வைத்துக் கொண்டு ஓடினார்கள்!

## மூகர் பெற்ற அருள்

அந்த உயர்ந்த தாம்பூல பூரித முகியாக இருக்கக்கூடியவள் அம்பிகை. அவளுடைய தாம்பூல பிரஸாதம் கிட்டியதால் தான் திருக்கோயிலில் வரதனாக இருந்தவர் காளமேகக் கவியாக மாறி, மேகம் பொழிகிற மாதிரி கவிதை பொழிந்தார்.

கவி என்றால், சாதாரணக் கவி அல்ல. புஷ்டி நிறைந்த கவியாக மாற்றுவாள் அம்பிகை, தன் தாம்பூலப் பிரசாதத்தினால். மூகர் அந்த மாதிரி கவிதானே? ஒரு பாட்டா இரண்டு பாட்டா? ஐந்நூறு பாட்டு பாடினார் என்றால்? பேச முடியாமல் இருந்தவர், அம்பாளைப் பற்றி மட்டுமே பேசினார் என்றால், அந்தத் தாம்பூலத்தினுடைய பிரசாத விசேஷம் அது!

(வளரும்)

யிலே காப்பி குடிக்கறதை விட்டுட்டுக் கொஞ்ச நாள் பதனி குடி... சூடு தணியும்'' என்றாள்.

# ''பதனீ... பதனீ...''

**ப**க்கத்து வீட்டு டெய்லர் மாமா துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு வந்து, ''பதனி ஊத்தம்மா'' என்றவாறு அவள் முன் குத்துக்காலிட்டு அமர்ந்தார். நான் அவளையே பார்த்துக்கொண்டிருந்தேன்.

பட்டையை அவர் குடிப்பதற்கு ஏற்றவாறு மடித்து, இரும்பு உழக்கால் பானையிலிருந்து பதனியை எடுத்து, கொஞ்சம் கொஞ்சமாக அவர் பட்டையில் ஊற்றியவாறு இருந்தவள், ஏதோ உள்ளுணர்வு தூண்டப்பட்டது போல் என்னை நிமிர்ந்து பார்த்தாள்.

அக்கம் பக்கம் பலரும் சூழ பதனீர் வியாபாரம் மும்முரமாக நடக்க ஆரம்பித்தது.

நான் பேப்பர் வாசிக்காமல் அவளைப் பார்த்தவாறு அமர்ந்திருந்தேன்.

ஒரு மணிநேரத்துக்குள் பதனீர் பானை காலியாகிவிட்டது. செம்பைத் தூக்கிக் கொண்டு ஓடிவந்த ஒரு சிறுவனிடம், ''அக்கா, நாளைக்கு நிறைய கொண்டு வர்றேன்'' என்று சொல்லி அனுப்பினாள்.

பின் அந்த இடத்தைச் சுத்தமாக்கி, எச்சில் பட்டைகளைக் குப்பையில் எடுத்துப் போட்டுவிட்டு, பதனீர் பானையைக் கையில் எடுத்தவள், என் மீது அழுத்தமாக ஒரு பார்வையை வீசிவிட்டுச் சென்றாள்.

அன்று இரவு சாப்பிட்டுக்கொண்டிருக்கும்போது அம்மாவே என்னிடம், ''காலை

''பதனியா?'' என்று நான் கேட்டதும், ''காலையிலே நம்ம வீட்டு வாசலுக்கே வந்து ஒருத்தி விக்கிறாளே... ஊரே கூடுது, நீயும் குடி... காப்பி வேண்டாம்'' என்றாள்.

விடியலை எதிர்பார்த்துப் படுக்கையை விரித்தேன்.

**அ**திகாலை நான் வாசல் கதவைத் திறந்து வெளியே வருவதற்கும், அவள் பதனீர் பானையை மரத்தடியில் இறக்கி வைப்பதற்கும் சரியாயிருந்தது.

''பதனீர் வேணும்'' என்றேன்.

''அங்கே இருங்க கொண்டு வர்றேன்'' என்றவள், பட்டையை எடுத்துத் துடைத்து மடித்து என் கையில் கொடுத்துவிட்டு, தெளிவாகப் பதனியை எடுத்து வந்து பட்டையில் ஊற்றினாள்.

பதனி ஊற்றும் அவள் முழங்கையில் 'அன்னக்கிளி' என்று பச்சை குத்தப்பட்டிருந்தது.

''உம் பேரு அன்னக்கிளியா?'' என்றேன்.

அவள் வியப்புடன் நிமிர்ந்து பார்க்க, அவள் கையைச் சுட்டிக்காட்டினேன்.

''ஆமாம்'' என்று சொல்லிவிட்டு, மெதுவாகச் சிரித்தாள்.

''சரி, பதனிக்கு?''

''துட்டுத்தானே... ரெண்டு ரூபா'' என்றாள்.

ஐந்து ரூபாய் நோட்டை எடுத்துக் கொடுத்தேன்.

''பதனி வித்து மீதியைத் தர்றேன்'' என்று அவள் சொல்லிக்கொண்டிருக்கும் போதே, டெய்லர் மாமா பதனி குடிக்க வந்து விட்டார்.

அவளின் பெரிய கண்களிலிருந்து அன்பான பார்வை வந்து என் மேல் படர்ந்தது.



அன்றிரவு அன்னக்கிளியின் வட்ட முகம் என் நெஞ்சுக்குள் ஒரு நீர்ப் பூ போல அலம்பி அலம்பி மேலே வந்தது.

ஒரு வாரம் தொடர்ந்து காலையில் பதனீர் குடித்தேன். அவள் கண்கள் ஏதேதோ பேசின. அதுவரையிலும் அவள் பெயரைத் தவிர அவளைப் பற்றி நான் அறிந்துகொண்டது ஏதுமில்லை.

**அ**ன்று மாலை கோவில்பட்டி பஸ் நிலையத்தில் ஒரு நண்பனுக்காகக் காத்து நின்றேன்.

நல்ல கூட்டம்.

என் முன்னால் அன்னக்கிளி, அவள் என்னைக் கவனிக்கவில்லை. அவள் பக்கத்தில் நின்ற ஒரு பெண்ணிடம், ''எக்கா, உங்க கழுத்தில் போட்டிருக்கிற பாசி என்ன விலை?'' என்று கேட்டாள்.

''பாசியா... என்ன நரிக்குறத்திகிட்ட வாங்கினதுன்னு நினைச்சியா? இது முத்து மாலை, விலை ரெண்டாயிரம்'' என்றாள் வெடுக்கென்று.

''ரெண்டாயிரமா! அம்புட்டு விலையா! பதனி விக்கிறவளால இதை வாங்க முடி

**எட்டயபுரம் ராஜன்**

யுமா?'' என்று சொல்லிக்கொண்டிருக்கும் போதே பஸ் வந்துவிட்டதால் கூட்டத்தில் கலந்துவிட்டாள்.

**வே**லையில் சேர அவசர உத்தரவு வந்துவிட்டதால் அன்றிரவே ஹைதராபாத் புறப்பட்டு விட்டேன்.

பெரிய நதியின் மேல் பாலம் கட்டும் வேலை. இரவு பகல் பாராது உழைக்க வேண்டியதிருந்தது.

எப்பொழுதாவது காலையில் அன்னக் கிளியின் நினைவு வரும். அதற்குள் ''ஸார், இரும்புக் கர்டர்கள் வந்திருக்கு... சரிபார்க்க வாங்க'' என்ற செய்தி வந்துவிடும்.

எந்திரங்களோடு எந்திரமாகிவிட்டேன்.

ஆறு மாதத்துக்குப் பிறகு விடுமுறை கிடைத்தது.

ஊருக்குப் புறப்படுவதற்கு முதல் நாள் ஹைதராபாத் கடை வீதிக்குச் சென்று, மூவாயிரம் ரூபாய் கொடுத்து, ஒரு முத்து மாலை அன்னக்கிளிக்குக் கொடுக்க வாங் கினேன்.

வாங்கிய பிறகுதான் யோசித்துக் கொண்டேன். இதை என்ன உரிமையில் அவளிடம் கொடுப்பேன்? எனக்குத் தெரிந் தவளா? தெரிந்தவள் மட்டும்தானா? சில நாட்களே பார்த்துப் பேசிய அவள் நினைவு கள், நிழலாய் இன்றும் தொடர்கின்றன. இந்த எண்ணமே ஏதோ ஒரு மகிழ்ச்சியை மனத்துக்குள் ஏற்படுத்தி விட்டது.




**இ**ரண்டு நாள் பயணம் செய்து ஊரை அடைந்தேன்.

குளித்து முடித்துச் சாப்பிட்டுக்கொண் டிருக்கும்போது ஹாலில் மாட்டியிருக்கும் என் புகைப்படத்தைப் பார்த்தேன்.

புகைப்படத்துக்குக் . கீழேயிருந்த ஸ்டாண்டில் ஓலையில் செய்யப்பட்ட அன்னம் ஒரு பக்கமும், கிளி ஒரு பக்கமும் வைக்கப்பட்டிருந்தன.

''இது என்னம்மா... அழகாயிருக்கே... யாரு செஞ்சது?'' என்று கேட்டேன்.

''போன மாசம் அந்த பதனி விக்கிற பொண்ணு வந்தா. நம்ம ஊருக்குத் தெக்குப்புற பனைகளைக் குத்தகைக்கு எடுத்து அவளும், அவ அண்ணனும் ஏதோ பிழைச்சுக்கிட்டிருந்திருக்காங்க. நிலத் தோட முதலாளி பனைகளை வெட்டி ஃபிளாட் போடப் போறேன்னு காலி பண்ணச் சொல்லிட்டாராம்.''

''சரிம்மா, இப்ப அவ எங்கே?'' என்று கேட்டேன்.

''ஆந்திரா பக்கம் அவங்க சொந்தக் காரங்க இருக்காங்களாம். அங்க பிழைக்கப் போறோம்னு சொல்லிச்சு. ரொம்ப நேரம் அந்தத் தூண் பக்கம் உட்கார்ந்து அழுதுச்சு. அது போனப்புறம் பார்த்தா உன் ஃபோட் டோவுக்குக் கீழ பனையோலையில செஞ்ச இந்த அன்னமும், கிளியும் இருக்கு'' என் றாள்.

பொங்கிவந்த அழுகையை அம்மாவுக் குத் தெரியாமல் அடக்கிக்கொண்டேன்.

பெட்டியைத் திறந்து அந்த முத்து மாலையை இரு சரமாக்கி ஒன்றை அன்னத்தின் கழுத்திலும், மற்றொன்றைக் கிளியின் கழுத்திலும் மாட்டினேன்.

மனத்தின் வேதனையை மேலும் கூட்டும்விதமாய், டெய்லர் மாமா வீட்டி லிருந்து 'அன்னக்கிளி உன்னைத் தேடுதே...' என்ற பாடல் காற்றில் மிதந்து கொண்டிருந்தது. ●

# உடையழகு... நடையழகு...

## இதைப் படிச்சா நீ பாஸ்!

ஒரு தேர்வில் வெற்றிபெற வேண்டுமானால் அறிவு, மொழி, ஆளுமை, பேச்சுத்திறன், கல்வியறிவு, பொது அறிவு... போன்றவை எவ்வளவு முக்கியமோ, அதே போல தோற்றமும் மிக முக்கியம்! 'நேர்முகத் தேர்வில் பாஸாகணுமே!' என பலர் ராப்பகலாக விழுந்து விழுந்து குண்டு குண்டு புத்தகத்தை புரட்டிக் கொண்டேயிருப்பார் கள். பர்ஸனாலிட்டி டெலவப்மெண்டை அலட்சியப் படுத்திவிடுவார்கள்.

அவசரத்தில் இன்டர்வியூ டிப்ஸ்களை நண்பர்களிடம் கடன் கேட்டு, உறவினரிடமிருந்து ஓஸி பெற்று... என ஒப்பேற்றுகின்றனர்.

சரி... நேர்முகத் தேர்வில் கலந்து கொள்ளும்போது ட்ரஸ் எப்படி இருக்க வேண்டும் பார்க்கலாமா...?



**ஆண் பெண் இருவருக் குமே பொதுவான விதிகள்:**

● ஆடம்பரமில்லாத சிம்பிள் தோற்றம்

● வாயில் சூயிங் கம், பெப்பர்மின்ட், போன்றவை கண்டிப் பாகக் கூடாது.



● பாடி பியர்ஸிங் என்ற பெயரில் புரு வம், உதடு, நாக்கு... என குத்தி, அங்கு தொங்கட்டான், வளையம் என ரகளை யாக மாட்டியிருந்தால் எப்படி நல்ல மதிப்பு பெற முடியும்? ஸோ, பியர்ஸிங்கிற்கு கல்தா கொடுத்து விட்டு தேர்வுக்குச் செல்லவும்.

● சென்டில் குளித்துவிட்டு 'மிட்டா மிராசு' கணக்கில் இன்டர்வியூ கொடுக்காதீர்கள். வாசனை திரவியங்களில் பாஸ் மயங்கி மூர்ச்சை போட்டு விடுவார். (ஆனால் நல்ல 'நினைவுடன்' உங்களை பெயிலாக்கி விடுவார்)

● ஃபங்க் ஹேர் ஸ்டைல் கூடாது.

● பாகி பாண்ட், முக்கால் பாண்ட், கேப்ரீஸ்... இதெல் லாம் இன்டர்வ்யூ ட்ரஸ் கிடையா!

● பாக்கெட்டில் சில்லறைகள், சிக ரெட் (ப்ளீஸ் வேண் டாமே)... இன்னபிற வஸ் துக்கள்.. என பிதுங்கி வழி யாமல் நல்ல தோற்றத்துடன் போகவும்.

★ ப்ளாஸ்டிக் கவர் களில், உங்கள் பயோ டேட்டா, சர்டிஃபிகேட்டை

● சப்தப்படுத்தும் காலணிகள், ரப்பர் செருப்பு, ஹவாய் சப்பல், கற்கள் வைத்த காலணிகள் கண்டிப்பாகப் போடக்கூடாது.

● தலைமுடியைப் பிரித்துவிட்டுக் கொண்டு போகக் கூடாது. சிம்பிளாக க்லிப் போட்டுக்கலாம்.



**இன்டர்வியூவைப் பொறுத்தவரை ஒரு கன்ஸர்வேடிவ் தோற்றத்தையே எதிர்பார்க்கிறார்களாம்.**

வைக்காதீர்கள். அருமையான சிக்கென்ற ப்ரீஃப்கேஸ் அல்லது போர்ட்ஃபோலியோ கேஸ் வாங்கி அதில் கொண்டு போகவும்.

சரி.. இனி தனித்தனியாக ஆண் பெண் ட்ரஸ் எப்படி இருக்க வேண்டும் என பார்ப்போம்...

**பெண் :**

● சிம்பிள் மேக்கப் போடவும். ஃபவுண்டேஷனை அப்பி கண்களில் ஐஷேடோ போட்டு சிவப்பு லிப்ஸ்டிக் போட்டால் உங்களை எப்படித் தேர்வு செய்வர்?

● காதுகளில் பெரிய பெரிய தொங்கட்டான், ஜிமிக்கி, கழுத்தில் நெக்லஸ், கைநிறைய வளைல்கள்... இது நிஜமாகவே இன்டர்வியூ கெட்-அப் அல்ல! காதுகளில் கம்மல், கைகளில் ஒரு வளையல், வாட்ச்... இது போதுமே.

● அடிக்க வருகிற நெய்ல்பாலீஷ் போடாதீர்கள்.

● உடை சாஃப்ட் கலரில் இருக்க வேண்டும். ஸ்கர்ட் போட்டால் நீளமாக இருத்தல் நலம்.

**ஆண் :**

● டார்க் ப்ளூ, க்ரே கலர் பெஸ்ட்!

● முழுக்கை சட்டைதான் போட வேண்டும். வெள்ளை ஷர்ட் போட்டால் வேலை கண்டிப்பாகக் கிடைத்துவிடும் என எதிர்பார்க்கலாம். அந்த அளவிற்கு வொயிட்டிற்கு வெயிட்!

● காலணிகள் டார்க் கலரில் இருக்க வேண்டும். கண்டிப்பாக ஷூஸ்தான் போட வேண்டும்.

● ஹேர்கட் பண்ணி ட்ரிம் லுக்கில் போகவும். (நோ அந்நியன் லுக்)

● தாடி வேண்டாம்

**பொ**துவாகவே இன்டர்வியூவை பொறுத்தவரை ஒரு கன்ஸர்வேடிவ் தோற்றத்தையே எதிர்பார்க்கிறார்களாம். முதல் மூன்று நிமிடங்கள் மிக முக்கியமாம். ஸோ தோற்றத்திற்கும், ட்ரஸ்ஸுக்கும் கவனம் கொடுக்கவும். என்ன மாதிரி கம்பெனி, என்ன வேலை, என்ன துறை... இதைக் கவனத்தில் கொண்டும் ட்ரஸ் செய்யலாம்.

குட் லக்!

**- லதா சேகர்**

## நீங்கள் கேட்டவை

● என்.காளிதாஸ், சிதம்பரம்

? பொருளாதார நெருக்கடியைச் சமாளிக்க ஒரு லட்சம் கோடி ஒதுக்கப் படும் என பிரதமர் மன் மோகன்சிங் தெரிவித்துள் ளாரே?

! அத்தனையும் மக்களின் வரிப்பணம் என்பதை உணர்ந்து, பொறுப்போடும் புத்திசாலித்தனமாகவும் செலவிடப்படாவிட்டால், கழுத்து மட்டுக்கும் வந்துள்ள பொருளாதார நெருக்கடி வெள் ளம், தலைக்கு மேலே போய் விடும்!

● பவானி கிருஷ்ணா, பெங்களூரு

? 'ஒருவர் மீது வழக்கு இருப்பதால் அவர் குற்றவாளி என்றால், காந்தி-நேருவும்கூட கிரிமினல் கள்தான்' என்கிறாரே உ.பி.மாநில அமைச்சர் பால்சிங் யாதவ் - இப்படியும் ஓர் அமைச்சரா?

! பிரிட்டிஷ் ஆட்சியின்போது இருந்த வழக்குகளைத் தமக்குச் சாதகமாக இன்று குறிப்பிடுவது விதண்டாவாதம் என்பது ஒருபுறம் இருக்க, அமைச்சரின் அபத்த வாதம் இரண்டு அத்தியாவசிய சீர்திருத்தங்

# பத்திரிகைகளைச் சாடுகிறாரே கருணாநிதி?

* குழப்பம் இலவசம்!

* இரட்டைத் தவறு

- தராசு

* ஏரியும் நீதியும்!





* ஒதுக்கிய கோடிகள்!

களை வலியுறுத்துகிறது:

1.நீதித்துறையில் தாமதங்களைத் தவிர்ப்பது.

2. தேர்தல் சட்டங்களில் குறைபாடுகளை நீக்குவது

● எஸ்.ராமசாமி,
வடக்கு தயிர்பாளையம்

**? பா.ஜ.கவில் அத்வானி Vs ஷெகாவத் மோதல் முற்றிவிட்டதே? ஜனாதிபதி, துணை ஜனாதிபதி பதவியில் இருந்தோர் தேர்தலில் நிற்கக்கூடாது என்று ராஜ்நாத்சிங் கூற, அப்படி ஏதும் சட்டம் இல்லை என்று ஷெகாவத் சொல்கிறாரே? எது சரி?**

! ஷெகாவத் சொல்வது சட்டப்படி சரி; ராஜ்நாத்சிங் கூறுவது நல்மரபுகளின்படி சரி. கட்சி சார்பில் ஷெகாவத் தேர்தலில் நிற்க முடியாவிட்டால் சுயேட்சையாக நின்று பார்க்கட்டுமே! பி.கு:ஷெகாவத், ராஜாஜியை துணைக்கு அழைத்திருக்கிறார். சரித்திரத்தின் பக்கங்களை மேலோட்டமாக அல்லாமல் அவர் ஆழ்ந்து படிக்க வேண்டும்.

● ஜி.மோகன்ராம்,
சென்னை - 117 ❒

**? நீதிமன்றம், ஏரி ஆக்கிரமிப்புகளை அகற்ற உத்தரவிட்டது. ஆனால், அமைச்சர் டி.ஆர்.பாலு, மாற்று இடம் தரப்படும்வரை (தாம்பரம் ஏரி ஆக்கிரமிப்பாளர்களுக்கு) அகற்றும் பணி நடைபெறாது என்கிறாரே? இது நீதிமன்ற அவமதிப்பு ஆகாதா?**

! என்ன கேள்வி கேட்கிறீர்கள்? நீதியைப் பார்த்தால் வோட்டு வருமா? ''ஆக்கிரமிப்பு அகற்றப்படாது'' என்று சொன்னால் தான் நீதிமன்ற அவமதிப்பு. டி.ஆர். பாலுவுக்கு இவ்வளவுகூடவா தெரியாது? நாசூக்காகத்தான் சொல்லுவார்.

● கே.வி.ராமன், சென்னை - 73

**? அஜ்மல் பாகிஸ்தானிதான் என்று இஸ்லாமாபாத் ஒப்புக்கொண்டுள்ளதே?**

! அப்பாடி! ஒன்றரை மாதங்களுக்குப் பிறகு ஒரு மில்லி மீட்டர் முன்னேற்றம்! இந்த வேகத்தில் தொடர்ந்தால் பயங்கரவாதம்தான் மேலும் பலம்பெறும். மத்திய அரசு சுறுசுறுப்படைந்து, பாகிஸ்தானைப் பொருளாதார ரீதியில் தனிமைப் படுத்தித் தண்டிக்க, சர்வதேச ஆதரவு திரட்ட வேண்டும்.

● வே.சித்ரா, கும்மிடிப்பூண்டி

* சிலேடையில் சவால்!

**? தடைசெய்யப்பட்ட இயக்கங்களை ஆதரிக்கும் கட்சிகளுடன் கூட்டணி கிடையாது என்று காங்கிரஸ் அறிவித்திருப்பது எதைக் காட்டுகிறது?**

! அதாவது, 'தி.மு.க.வுடன் கூட்டணி தொடர வேண்டுமானால்...' என்று கலைஞரை எச்சரிப்பதாகக் கொள்ளவும்.



● ரேவதிப்ரியன், ஈரோடு

? கிளி விழலாம், ஆனால் புலி விழ மாட்டாள் என கவித்துவமாக வைரமுத்து கூறுகிறாரே?

! சிலேடையில் சவால் விட்டுத் தம்மைக் காப்பாற்றிக் கொள்கிறார். ஆனால், புலி விழாவிட்டாலும் அது வழிக்கு வராதவரை, அதன் ஆதிக்கத்தில் அமுங்கிக்கிடப்போருக்குக் கிலிதான்!

● சி.இந்து அழகேஷ், கள்ளக்குறிச்சி

? ''நாட்டின் ஒற்றுமைக்கும் இறை யாண்மைக்கும் ஊறு விளைவிக்க முயலும் தீவிரவாதிகளை, இரும்புக்கரம் கொண்டு அடக்குவோம்'' என்று சிதம் பரம் கூறியுள்ளது குறித்து...?

! ஓ.கே; சந்தோஷம்; எப்போது என்று சொல்லிவிட்டால், உடனே கைதட்டிப் பாராட்டி விடலாம்! கௌஹாத்தியில், அவர் வர்ற வழியிலேயே குண்டு வைச்சுட் டாங்களே!

● பி.என்.ஜெயகுமார், திருவாரூர்

? என்னை தாதாவாக்கப் பார்க்கிறார்கள் என்று திருமாவளவன் குமுறுகிறாரே?

! நீங்கள் 'தாதா'வாகவில்லை; நல்ல அரசியல் தலைவர்தான் என்பதை நிரூபித்துவிட்டால் போயிற்று. இதற்கு ஏன் கலங்குகிறீர்கள் திருமா? மடியில் கனம் இருந்தால்தானே வழியில் பயம்?

● வி.எம்.செய்யதுபுகாரி, அதிராமபட்டினம்

? மாற்றுக் கட்சியினர் பணம் கொடுத் தால் வாங்கிக் கொள்ளுங்கள்; வோட்டை மட்டும் எங்கள் கட்சிக்குப் போடுங்கள் என்கிறாரே விஜயகாந்த்?

! வோட்டுக்குப் பணம் பெறுவது லஞ்சம் எனில், பணம் பெற்றுக்கொண்டு வோட்டுப் போடுவது லஞ்சம் பிளஸ் துரோகம். வளர்ந்து வரும் விஜயகாந்துக்கு இதுபோன்ற பேச்சுக்கள் பெருமை சேர்க்க மாட்டா.

● பா.அசோக், ஸ்ரீவில்லிபுத்தூர்

? ''இலவசத்தைக் கேலி செய்யும் பத்திரிகைகள் வாரம் ஒரு நாள் நான்கு பக்க இலவச இணைப்பு தருகிறார்களே



- அது இலவசம் இல்லையா?'' என்ற சாடியுள்ள கலைஞரின் கருத்து குறித்து?

! அபத்தம்! பத்திரிகைக்கு ஒரு விலை உண்டு. அதைக் கொடுத்தால்தான் இலவச இணைப்பு கூடுதலாகக் கிடைக்கும். அரசு தரும் இலவசங்கள், கடைத் தேங்காயை எடுத்து வழிப் பிள்ளையாருக்கு உடைக் கும் ஜாலக்கு!

● எல்.எம்.மங்கை, திருவண்ணாமலை ★

? சென்னை மாநகரப் பாலங்களுக்கு, மதிப்புக்குரிய முன்னோர் பெயர் வைத்து அழைப்பது வரவேற்கத்தக்கதா?

! புதிய பாலங்களுக்கு அவ்வாறு பெயர் சூட்டலாம். ஏற்கெனவே உள்ள பாலங் களுக்குப் பெயர் மாற்றுவது சரியல்ல. அது வரலாற்றை அவமதிப்பதாகும். நிற்க; பெரியோரின் பெயர் தாங்கிய பாலங்கள் கட்டப்பட்டதில், 'ஊழல்' என்ற பேச்சு வருகிறபோது, வேதனையோடு யோசிக்கத் தான் தோன்றுகிறது! ●

❐ ரூ.100/- பரிசு பெறுபவர்: ஜி.மோகன் ராம், சென்னை - 117

★ ரூ.50/- பரிசு பெறுபவர்: எல்.எம்.மங்கை, திருவண்ணாமலை

''புனிதாம்மா... உங்களுக்கு ஃபோன்...''

மனைவியுடன் பிணக்கம் கொண்ட கணவனைப் போல் தனியே மேடையில் ஒருக்களித்துப் படுத்திருந்த ரிசீவரை காதுக்குக் கொடுத்தாள்.

''ஹலோ, யார் பேசறது?''

''நீ... நீங்க... புனிதாதானே...?''

''ஆமா...''

எதிர்முனை பேசிற்று: ''நான் செல்வராஜ் பேசறேன்.''

'பக்'கென்று இதயம் ஒரு வினாடி தன் இயக்கத்தை நிறுத்தி மீண்டும் வேகவேக மாக இயங்கத் தொடங்கிற்று.

இவர் ஏன் இத்தனை வருடம் கழித்து...

''சௌக்கியமா இருக்கியா?''

''ஆ... ஆமா...'' குரல் நடுக்கம் காட்டி யது.

''நான் உங்கிட்டே கொஞ்சம் தனியா பேசணும். வீட்டுக்கு வரட்டுமா?''

''ந்நோ...'' அவசரமாக மறுத்தாள்.

''ஓ.கே... அப்ப இன்னிக்குச் சாயங் காலமா அஞ்சு மணிக்கு புத்துமாரியம்மன் கோயிலுக்கு வந்துடு!''

அவன் குரலில் ஒரு அழுத்தம் இருப்ப தாக நம்பினாள்.

மறுக்க முடியவில்லை. மனதில் திகில்...

''சரி...''

ரிஸீவரைக் கவிழ்த்துவிட்டு தன் மேஜைக்குத் திரும்பினாள்.

மனத்தில் அமோகமாய் கலவரம்.

செல்வராஜ்... அவளது மாஜி காதலன். ஐந்து வருடங்களுக்கு முன் காதலித்து, பின் அவன் ஏதோ ஒரு காரணத்தால் வீட்டில் சண்டையிட்டு ஊரை விட்டு ஓட... இவள் மற்றொருவனுக்குக் கழுத்தை நீட்டி சென் னையில் குடியேறி இருக்கிறாள்.

சுமார் ஐந்து



வருடங்களுக்கு அப்புறம் மீண்டும் அவன் முளைத்திருக்கிறான்.

கடவுளே! பழைய வாழ்க்கை என் கணவருக்குத் தெரிந்துவிட்டால் என்னாவது? செல்வராஜ் ஏதாவது மிரட்டுவானோ? 'நான் தயார்' என்று மிரட்டிய அழுகையைக் கஷ்டப்பட்டு அடக்கி... மேஜையில் அமர்ந்து வேலையில் மூழ்க நினைத்தாள்.

சாத்தியமாகவில்லை.

பயம்... மனம் பூராவும் பயம் புழுவாய் ஊர்ந்து கொண்டிருந்தது.

வேதனை...

முடியவில்லை அவளால். மேஜையில் கவிழ்ந்து படுக்க...

திடீரென தோளில் யாரோ கை வைப்பதை உணர்ந்து...

நிமிர்ந்து பார்த்தாள்.

நிர்மலா...

''என்னாச்சு புனிதா உங்களுக்கு?''

''ஒண்ணுமில்லே நிர்மலா... லேசா தலைவலி.''

''பொய்... ஏதோ மறைக்கறீங்க... ஃபோன்ல யார் பேசினாங்க? சரி... சரி.. வாங்க... அப்படியே வெளியே போய் காஃபி குடிச்சுட்டு வரலாம்... மனசுக்குக்

# அவன் ஏன் வரச் சொன்னான்?

போளூர் சி.ரகுபதி



கொஞ்சம் ஆறுதலா இருக்கும்...''

புனிதா எழுந்து கொள்ள... இருவரும் எதிர்த்திசை ஹோட்டலை நோக்கி நடந்தனர்.

காஃபி ஆவி பறக்க மேஜையில் வந்து அமர....

அதைப் பருகிக்கொண்டே புனிதா சொல்ல ஆரம்பித்தாள்.

சொந்தக் கிராமத்தில் செல்வராஜைக் காதலித்து... பின் பிரிந்தது, இன்று அவன் ஃபோன் மூலம் மிரட்டியது வரை ஒன்று விடாமல் சொன்னாள்.

கேட்டுக் கொண்டிருந்த நிர்மலாவின் முகத்தில் இப்போது கருமை படர்ந்திருந்தது.

'ச்சே... நம் கஷ்டத்தைச் சொல்லி

# நீ வரலாம் போகலாம் நினைவின் வாசலில் கதவுகளே இல்லை!

– தமிழ்நாயகி

இவள் மனத்தையும் நோகடித்து விட்டோமா?!' என்று எண்ணினாள் புனிதா.

**அ**மைதியாய் கம்பீரமாய் புற்று மாரியம்மன் கோயில் உயர்ந்து நிற்க...

ஆட்டோ டிரைவரிடம் பணத்தைக் கொடுத்தவள்... தூரத்தில் செல்வராஜ் நிற்பதைக் கவனித்தாள்.

தயக்கமாக... பீதி யடைந்த மனதுடன் அவனை நோக்கி நடக்க ஆரம்பித்தாள்.

இவளைக் கண்டதும் அவன் புன்சிரிப்பை உதிர்க்க...

தலைகுனிந்து கொண்டாள்.

''புனிதா... நல்லா இருக்கியா?''

''ம்...''

''புனிதா... நாம் காதலிச்சது... ஏதோ பருவக் கோளாறு... தப்பு நம்ம மேல இல்லே... வயசு மேல.. அது அறியாம செஞ்ச தப்பு... இப்ப நம்ம வாழ்க்கைக்கு இடைஞ்சலா இருக்கக்கூடாது...''

''ம்...'' என்றவளுக்கு ஒன்றும் புரியவில்லை.

"பழைய வாழ்க்கை என் கணவருக்குத் தெரிந்துவிட்டால் என்னாவது? செல்வராஜ் ஏதாவது மிரட்டுவானோ?"



''புனிதா இப்ப எனக்கும் கல்யாணம் ஆயிடுச்சு... மனசுக்குப் பிடிச்ச மனைவி... ஒரு குழந்தையும் இருக்கு. என் மனைவிக்கு குணமும் நல்ல குணம். ஆனா கொஞ்சம் பிடிவாதக்காரி... ரோட்டில் அவகூடப் போகும் போது என்னையறியாம எந்தப் பொண்ணையாவது திரும்பிப் பார்த் துட்டா கூட ரெண்டு நாள் 'பட்டினி' போட்டுடுவா...

அப்படிப்பட்டவளுக்கு நம்மோட பழைய விஷயம் தெரிஞ்சா அப்புறம் என் கூட சேர்ந்து வாழ்வாளாங்கறதே சந்தேகம்...''

''அதனால...'' தலை நிமிராமலேயே கேட்டாள் புனிதா.

''இப்ப ஏன் உன்னை இங்கே கூப்பிட்டேன்னா என் மனைவியும் உங்க ஆபீஸ்லதான் வேலை பார்க்கறா... சப்போஸ் நீ அவகூட நல்லாப் பழகி... ஏதோ ஒரு சந்தர்ப்பத்திலே நம்ம பழைய விஷயத்தை அவகிட்ட சொல்லிடக் கூடாது பாரு... பொம்பளைங்ககிட்டே ரகசியம் தங்காதும்பாங்க. அதான் உன்னைக் கூப்பிட்டு முதல் லேயே சொல்லிடலாமுன்னு நெனைச்சேன்...''

''அப்பாடா... இவ்வளவு தானா?'' பெருமூச்சு விட்டாள்.

''அவ பேரு நிர்மலா... உங்க ஆபீஸ்ல வேலைக்குச் சேர்ந்து ஒரு மாசம்தான் ஆச்சு...''

அவன் சொல்லிக் கொண்டே போக...

என்ன? நிர்மலாவா...?

இப்போது புனிதாவுக்கு அழவேண்டும் போல் இருந்தது. ●

கேவலம் ஒரு எம்.எல்.ஏ. பதவிக்காகத் திருமங்கலத்தில் கோடிக்கணக்கான ரூபாயை அரசியல் கட்சிகள் வாரி இறைத்துள்ளன. தொகுதி மக்கள் தற்காலிகமாக மகிழ்ந்திருப்பார்கள். அந்தப் பணம் ஏதேனும் நிரந்தரத் தேவையைப் பூர்த்தி செய்திருந்தால் மக்கள் மகிழ்ச்சியடைந்திருப்பார்களே!

**- கே.என்.சுப்பிரமணியன், சென்னை**

பெருகி வரும் 'ஸ்டிரைக்'கால் பாதிக்கப்படுவது மாதாந்திர பட்ஜெட் போடும் நடுத்தர மக்களே!

**- கிரிஜாராகவன், கோவை**

தஞ்சாவூர்க்கவிராயரின் 'சொல்வாசம்' கவிதைத் தொடர் ஆரம்பமே கலகலப்பாகக் களைகட்டுகிறது.

**- வானவில் மூர்த்தி, கடலூர்**

'சத்யம் கம்ப்யூட்டர்' நிறுவன மோசடி குறித்து 'கல்கி' தீட்டிய கார்ட்டூனுக்கு மவுஸ் அதிகம்.

**- த.சத்தியநாராயணன், அயன்புரம்**

# கலகலப்பான ஆரம்பம்!

'சினி சிப்ஸ்' படிப்பதற்குச் சுவாரஸ்யம் என்றால் அதற்குக் கொடுக்கப்படும் கமெண்ட்கள் படுசுவாரஸ்யம்.

**- ஆர்.ரங்கநாதன், சென்னை**

'ஷார்ட் கட்' கனவு புதிய கட்டுரை

## வட்ட மேஜை

இன்றைய சூழ்நிலையில் பலருக்குக் கட்டாயம் உதவும் என்பதில் ஐயமில்லை. நல்ல முயற்சி.

**- ஆர்.ஓ.அமுதன், சென்னை**

தும்புருவின் சீஸன் சிந்தனைகள் ஒரு சுவையான இசைத் தொகுப்பு; கட்டுரை முழுவதும் இழையோடியது தெளிவான தம்பூரா இசை.

**- லெ.நா.சிவகுமார், சென்னை**

ஹாஸ்பிடல் எத்திக்ஸ். மேலும் சில வாரங்கள் தொடர்ந்தால், நிறைய செய்திகளைத் தெரிந்துகொண்டிருக்கலாம்.

**- சி.இந்து அழகேஷ், கள்ளக்குறிச்சி**

ஹாய் டார்லிங் என்கிற அருமையான தொடர், வாசகர்களுக்கு அரு மருந்து.

**- ப.ஹமாம்புஜம், சென்னை**



## கலக்க வருதுப்பா

# கல்கி

கெட் ரெடி!
கெட் ரெடி!
கெட் ரெடி!



## முதல்ல மதுரை!

உங்க மாவட்டத்தோட
'பெஸ்ட்' என்ன...
'வொர்ஸ்ட்' என்ன?

நீங்க ஜாலியா சுத்தற ப்ளேஸ் எது..?

கண்டதும் கன்னத்துல போட்டுக்கற
கோயில் இருக்கா?

'டிஸைன் டிஸைனா' போட்டு கலாய்க்கற காஸ்டியூம்ஸ்
உங்க டிஸ்ட்ரிட்ல எங்க பெஸ்ட்டா கிடைக்கும்?

உங்க மாவட்டத்தை அதிகம் கஷ்டப்படுத்துற
பிரச்னை என்ன? 'தீர்வு'தான் என்ன?

மிஸ்டர் மாவட்டம் யார்? என்ன காரணம்?

நீங்க கதை எழுதுவிங்களா? கவிதை புனைவிங்களா?

உங்க 'ஜோக்' ஷோக்கா இருக்குமா?

—'உம்'ன்னா, உடனே 'கல்கி'க்கு எழுதி அனுப்புங்க!

# நீங்க ச்சும்மா கோடு போடுங்க... நாங்க உடனே ரோடு போடறோம்!

ஆமாம்! உங்கள் மாவட்டத்துக்கு 'கல்கி' குழு, நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்?

ஆனா சில கண்டிஷன்ஸ்...

**கல்கி - மாதம் ஒரு மாவட்டம்**

**மதுரை மாவட்டம்**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்
☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபாக்ஸ்

47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32

- மேலே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்பு மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள், படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்).
- பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- மாவட்டத்தின்...

பிரச்னைகளுக்கு - ☑ பெட்டிஷன் பாக்ஸ்

ஆன்மிக, வியாபார சுற்றுலா தலங்களின் சிறப்புக்கு - ☑ நியூஸ் ஏந்தி பவன்

சிறுகதைகள், கவிதைகளுக்கு - ☑ வேடந்தாங்கல்

நகைச்சுவைக்கு - ☑ ஜோக் பாக்ஸ்

என்றவாறு கூப்பனில் ☑ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொடர்பு எண்... ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

கடிதம் வந்து சேர வேண்டிய கடைசி தேதி 8.2.2009

ஏழாயிரம் கோடி ரூபாய் ஊழல், சேர்மன் ராமலிங்க ராஜு கைது, புதிய நிர்வாகக் குழு நியமனம் என்று மீடியாவை ஆக்கிரமித்து, பெரும் பரபரப்பூட்டிக்கொண்டிருக்கிறது சத்யம் கம்ப்யூட்டர்ஸ் நிறுவனம். உள்ளே என்னதான் நடக்கிறது? பலவிதமான கேள்விகளுடன் ஓய்வுபெற்ற மூத்த ஐ.ஏ.எஸ். அதிகாரியான பி.எஸ்.ராகவனைச் சந்தித்தோம்...



**ஏழாயிரம் கோடி அபகரிப்புக்கு எது துவக்கப் புள்ளி?**

''தனியார்மயம், உலகமயம், தாராளமயம்... என்ற பெயர்களில் தனியார் நிறுவனங்களுக்கு அபரிமிதமான சுதந்திரம் அளிப்பதுதான் இதன் காரணம். தனியார் தொழில் அதிபர்களின் பேராசை மோசடி மனப்பான்மை, எல்லாமாகச் சேர்ந்து இத்தகைய நிலைமைக்குக் கொண்டு வந்திருக்கிறது.

ஒரு நிறுவனத்தின் தலைமையும், அவர்களது தணிக்கைக் குழுவும் ஒன்று சேர்ந்துவிட்டால், நிறுவனத்தின் வரவு-செலவு கணக்கை வைத்து, எந்தவிதமான பொய், பித்தலாட்டங்களையும் செய்வது சாத்தியமாகும். இப்போது சத்யம் கம்ப்யூட்டர்ஸ் நிறுவனம் விவகாரத்திலும் அதுதான் நடந்திருக்கிறது.''

**மோசடிக்கு யார் காரணம்?**

''கடந்த ஐந்தாறு வருடங்களாகத் திட்டமிட்டு மோசடி செய்து ஏழாயிரம் கோடி ரூபாயைக் கபளீகரம் செய்திருக்கிறார்கள். இந்தத் தில்லுமுல்லுவில் ராமலிங்க ராஜுவை மட்டும் குற்றம் சொல்லிப் பயனில்லை. கம்பெனியின் நிர்வாக போர்டில் இடம்பெற்ற சுதந்திரமான இயக்குனர்களும், தணிக்கை (auditor) நிறுவனம் 'பிரைஸ் வாட்டர் கூப்பரு'ம்கூட குற்றவாளிகள்தான்.

சத்யம் நிறுவன நிர்வாகக் குழுவில் இடம்பெற்ற சுதந்திரமான இயக்குனர்கள் எல்லாம் சாதாரணமானவர்கள் அல்ல. ஒருவர் புகழ்பெற்ற நிர்வாகவியல் பள்ளியின் தலைவர். இன்னொருவர் ஹார்வர்டு பல்கலைக்கழகத்தின் முனைவர். மூன்றாமவர் தகவல் தொழில்நுட்ப வல்லுனர். நான்காமவர் மத்திய அரசாங்கத்தில் செயலாளர் பதவிவகித்தவர்.

இவர்கள் எல்லாம் விழிப்புடன் கண்காணித்திருந்தால், ஆறேழு வருடங்களில் 7,000 கோடி ரூபாயை யாராவது சுருட்டி இருக்கமுடியுமா? 'சத்யம்' அளித்த பலவிதமான சொகுசு, சௌகரியங்களையும், சலுகைகளையும், செல்வச் செழிப்பையும், நன்றாக அனுபவித்துவிட்டு, பங்குதாரர்



பி.எஸ்.ராகவன்

# ஆடிட்டர்கள் துணையோடு அட்டூழியம்!



★ ராமலிங்க ராஜு

களின் நலனையும், கம்பெனியின் நலனை யும் காக்கத் தவறிவிட்டார்கள். இது அனைவரது கூட்டுச் சதியின் விளைவுதான்.

மேலும், செபி மற்றும் சத்யம் நிறுவனத்துக்குக் கடன்கொடுத்த ஐ.சி.ஐ.சி.ஐ. உள்ளிட்ட வங்கிகளும் விழிப்புடன் நடந்துகொள்ளவில்லை.''

**திடீரென இப்போது வெடித்திருப்பது ஏன்?**

''சத்யம் நிறுவன அதிபர் ராமலிங்க ராஜு, தன் இரண்டு மகன்களின் பெயரில் இரண்டு கம்பெனிகள் ஆரம்பித்தார். ஒன்று கட்டுமானப் பணிகளைச் செய்யும் நிறுவனம். மற்றொன்று ரியல் எஸ்டேட் நிறுவனம். ஆறேழு வருடங்களில் சுருட்டிய பணத்தைச் சரிக்கட்டும் விதமாகவும், முதலீட்டாளர்களின் கவனத்தைத் திசைதிருப்பவும், தன் மகன்களின் கம்பெனிகளை சத்யம் கம்ப்யூட்டர்ஸ் நிறுவனமே வாங்கிக்கொள்ளும் முடிவை நிர்வாக போர்டு எடுத்தது. ஆனால் கம்ப்யூட்டர் கம்பெனிக்கும், கட்டுமானக் கம்பெனிகளுக்கும் என்ன சம்மந்தம்? இப்போது அவற்றை வாங்கவேண்டிய அவசியமென்ன? என்று அயல்நாட்டு முதலீட்டாளர்கள் கேள்வி எழுப்பவே, மகன்களின் கம்பெனிகளை வாங்கும் முயற்சி தடைப்பட்டது. தில்லுமுல்லு வெளிச்சத்துக்கு வந்தது.''

**சத்யம் நிறுவனத்தின் ஐம்பத்து மூன்றாயிரம் ஊழியர்களின் கதி?**

''நிறுவன தலைமை தில்லுமுல்லு செய்திருந்தாலும், அதன் ஊழியர்களின் தொழில்நுட்ப அறிவு கம்பெனியின் மாபெரும் பலம். நிதிநெருக்கடி காரணமாகச் சில நிர்வாகச் சீர்திருத்த நடவடிக்கைகள் எடுக்கப்படலாம். திறமையும், அனுபவமும் வாய்ந்த நிபுணர்கள் கொண்ட புதிய நிர்வாகக்குழுவின் நடவடிக்கைகளால் நிலைமை சீரடையலாம்.''

**உலக அரங்கில் இந்திய சாஃப்ட்வேர் துறைக்கு இது கரும்புள்ளியா?**

''ஒரு கம்பெனியின் நடத்தையை வைத்துக்கொண்டு, ஒட்டுமொத்தமாக எல்லோருமே நம்பகத்தன்மையைச் சந்தேகிக்க மாட்டார்களென்றாலும்கூட, உலக நாடுகள் இனி கொஞ்சம் எச்சரிக்கையோடுதான் நம்மை அணுகுவார்கள்.''

**ராமலிங்க ராஜுவுக்கு பத்து வருட ஜெயில் என்கிறார்களே?**

''இங்கே பொதுவாக உறுதியான சட்டங்களை நிறைவேற்றுவதில்லை; இருக்கிற சட்டங்களும் தனி நபரது அரசியல் செல்வாக்கு மற்றும் செல்வச் செழிப்புக்கு ஏற்ப வளைந்துகொடுக்கின்றன. மற்றவர்களுக்கு நல்லதொரு பாடம் கற்பிக்கும் வகையில் தண்டனைகள் தரப்படுவதில்லை; எனவே, இப்போது எதையும் உறுதியாகச் சொல்வதற்கில்லை.

\- மானஸா

நடிகர் அருண்விஜய், இயக்குநர் ஏ.வெங்கடேஷின் இயக்கத்தில் 'மலை மலை' என்ற படத்தில் நடித்து வருகிறார். இந்தப் படத்தைத் தயாரிப்பது வேறு யாருமல்ல; அவருடைய மாமனார் டாக்டர் மோகன்தான். **(பொண்ணையும் கொடுத்து, படத்தையும் கொடுக்கறாருன்னா அவர் மாமனார் இல்ல. 'மகா'மனார்!)**

ஒரு படத்தின் இசை வெளியீட்டு விழாவின் மேடையில் அந்தப் படத்தின் நடிகர் - நடிகையர் படம் இருக்கும். ஆனால் 'ஒளியும் ஒலியும்' படத்தின் இசைவெளியீட்டு விழா மேடையை அலங்கரித்தது முன்னாள் ஜனாதிபதி அப்துல் கலாமின் படம்! **(கனவு காணச் சொன்னவருக்குக் கனவு தொழிற்சாலையில் மரியாதை... சபாஷ்!)**

மிஷ்கின் இயக்கத்தில் வெளிவரவிருக்கும் 'நந்தலாலா' படத்துக்கு மொத்தம் ஆறு பாடல்களைப் போட்டுக் கொடுத்திருக்கிறார் இளையராஜா. ஆனால், படத்தில் இடம்பெறுவது இரண்டுதானாம். **(இது இளையராஜாவுக்குத் தெரியுமா?)**

'அச்சமுண்டு அச்சமுண்டு' படத்துக்கு 'ரெட்' என்ற அதிநவீன டிஜிட்டல் கேமிரா பயன்படுத்தப்பட்டிருக்கிறதாம். ரெட் கேமராவில் படம்பிடிக்கப்பட்ட முதல் இண்டியன் படம் இதுதானாம். **(அச்சமில்லாம பாக்கலாமா?)**

நடிகர் விஜய் நடிக்க, பிரபுதேவா இயக்கத்தில் ஏற்கெனவே ரஜினி நடித்து சூப்பர் டூப்பர் ஹிட்டான 'தளபதி' படம் ரீமேக் ஆக இருக்கிறதாம். அநேகமாக இந்தப் படத்தை சன் பிக்சர்ஸ் தயாரிக்கலாம் என்பதும் லேட்டஸ்ட் தகவல். **(அஜித்துக்கு இந்த விஷயம் தெரியுமா?)**

சோனியா அகர்வாலைத் தொடர்ந்து சின்னத் திரையில் திறமையைக் காட்ட சினேகா ரெடியாம். இப்போது கைவசமுள்ள இரண்டு படங்களை நடத்துக்கொடுத்தப் பிறகு அம்மணி கோதாவில் குதிப்பாராம். **(அப்பவும் உங்க புன்னகை மிஸ்ஸாகாம இருக்குமா?)**

வாரிசுகளின் காலம் அல்லவா இது. 'ஆனந்த தாண்டவம்' படத்தில் நடிகர் முரளியின் மகன் அதர்வா ஹீரோவாக வேடம் கட்டுகிறார். பின்னணியில் இருந்து எல்லா வேலைகளையும் கவனித்துக் கொள்வதோடு, 'சைடு' கேரக்டருக்கு வேடம் கட்டுகிறாராம் முரளி. **(மகன் கையில் மைக்கைக் கொடுத்திராதீங்க.)**

ஆர்.பி.சௌத்ரி, தன் சூப்பர் குட் பிலிம்ஸுக்காக தமது மகன் ஜீவாவிடம் கால்ஷீட் கேட்டாராம். கதை என்னன்னு சொன்னாதான் கால்ஷீட் என்று கட் அண்ட் ரைட்டாகச் சொல்லிவிட்டாராம் ஜீவா! அப்செட் ஆகி அப்பச்சி இப்ப புழும்பலில் இருக்காராம்! **(அப்பப்பா)**

# சினிசிப்ஸ்



தேவயாணி, ப்ரியாராமன் இவர்களைத் தொடர்ந்து, நம்ம சிம்ரனும் படத்தயாரிப்பில் குதித்திருக்கிறாராம். ஹீரோ? வேறு யார்? அம்மணியின் வீட்டுக்காரர்தான், (அப்ப வீட்டுக்குள்ள இனி ஸ்டார்ட், கேமரா, ஆக்ஷன் சத்தம்தானா?)

- நியூஸ்பாய்

● அருந்ததி, திண்டிவனம்

**அது என்ன திருக்கண்ணமுது...?**

பாயசத்தைப் பெருமாளுக்குப் படைத்து விட்டு; அருந்ததி அருந்தினால், அந்த ஆரா அமுதனின் திருக் கண் பட்டு அது திருக் கண்ணமுதாகும். நம் கண் பட்டால் திருஷ்டி. ஆண்டவன் கண் பட்டால் சிருஷ்டி.

● வி. ஆனந்தகிருஷ்ணன், அண்ணாநகர்

**தலையணை மந்திரம் என்றால் என்ன?**

கணவனை, மனைவி போர்வையால் மூடி ரகசியமாக அளிக்கும் பிரம்மோப தேசம்; கணவனைக் கட்டிப்போடும் பிரம்மாஸ்திரம்.

● என். சண்முகம், திருவண்ணாமலை

**2009ம் ஆண்டில் எதை லட்சியமாகக் கொள்ளலாம்?**

அலட்சியமாக இல்லாமல் இருப்பதே சிறந்த லட்சியம்.

● ஆர். கோபாலன், மேற்கு மாம்பலம்

**புடைவையில் நமீதா எப்படி இருப்பார்..?**

நமீதாவாகத்தான் இருப்பார்.

● ஷீர், குடியாத்தம்

**நான் உருதுவில் கவிதை எழுது வேன். ஆனால், நண்பர்கள் கவிதை சுமாராக இருக்கிறது என்கிறார்கள்?**

விடாமல் எழுதுங்கள். இப்போது 'சுமார் கய்யாம்' ஆக இருக்கும் நீங்கள், ஒருநாள் 'உமார் கய்யாம்' ஆக நிச்சயம் மாறுவீர்கள்.

● ரா. பிரசன்னா, மதுரை

**'ஊழல் பெருச்சாளி' என்கிறோம். ஊழலுக்கும் - பெருச்சாளிக்கும் என்ன சம்பந்தம்?**

இரண்டையும் லேசில் ஒழிக்க முடியாது.

● ஆர்.ரங்கராஜன், சென்னை

**'Love' னு ஒரு வார்த்தை இல்லாமல் இருந்தால்...?**

Love-All சொல்லித் தொடங்க வேண்டிய டென்னிஸ் விளையாட்டு இல்லாமல் போயிருக்கும். மிலிடெரி ஓட்டலில் இவ்விடம் 'பு' கிடைக்கும் என்று எழுதப் பட்டிருக்கும். 'புலவ்'வில் உள்ள 'லவ்'



இல்லாமல் போனதால்.

● சி. இந்து அழகேஷ், கள்ளக்குறிச்சி

**? மகாகவியை, தும்பிக் கையால் யானை தாக்கியது ஏன்...?**

தமிழின் நம்பிக்கையைத் தும்பிக்கையால் தழுவ வந்த அந்த யானைக்கு, அடி சறுக்கி விட்டது போலும். மலை யானைப் பழம் நழுவி முத் தமிழ்ப் பாலில் விழுந்துவிட் டது. யானைக்கும் கஜேந்திர மோட்சம் கொடுத்தவன் கண்ணன். அந்தக் கண் ணனின் நெருங்கிய நண்பனுக்கு கஜேந்திரன் மோட்சம் கொடுத்துவிட்டது.



# கிரேஸியைக் கேளுங்கள்

விடுவேன்.

● எல்.மோகனசுந்தரி, கிருஷ்ணகிரி

**? கஞ்சத்தனத்துக்கும், சிக்கனத்துக்கும் என்ன வேறுபாடு...?**

திருமணமாகி 'ஹனி மூன்' போகாமல் இருப் பவன் கஞ்சன். மனைவியை விட்டுவிட்டு தான் மட்டும் 'தனி மூன்' செல்பவன் சிக்கனச் செம்மல்.

● லலிதா செல்லப்பா, பம்மல்

**'உத்தியோகம் புருஷலட்சணம்' என்பார்கள். இப்ப அத்தனை பெண் களும் உத்தியோகம் பார்க்க ஆரம்பித்துவிட்டார்கள். அந்தப் பழமொழி என்ன ஆகும்...?**

உத்தியோகத்துக்கு லட்சணம் பெண் கள்' என்று, அந்தப் பழமொழியை 'ரீ-மிக்ஸ்' செய்ய வேண்டியதுதான்.

● என். காளிதாஸ், சிதம்பரம்

**வீட்டில் சண்டை நடந்தால் நீங்கள் எந்தப் பக்கம்...?**

'கப்'பென்று நழுவி கையில் கிடைத்த புத்தகத்தில் ஏதாவது ஒரு பக்கம் மூழ்கி

● பி.கிருஷ்ணன், ஆதம்பாக்கம்

**கீதாசார்யன் கண்ணன், கடைசி காலத்தில் கேவலம் ஒரு வேடன் கையால் இறக்கலாமா...?**

ராமாயண வாலியை, மரத்தின் பின் மறைந்து நின்று கொன்றார் ராமன். அதற்குப் பரிகாரமாக கிருஷ்ணாவதாரத்தில் ஒரு மரத்தின் பின் மறைந்திருந்து உறங்கும் தன்னை, மறைந்து இருந்து கொல்ல வாலிக்கு வாய்ப்பளித்தார் கண்ணனாக வந்த ராமன். ஆக, வேடனாக வந்தது வாலி என்ற மாறு வேடன். ராமாயணத்தில் 'மரத்தில் மறைந்தது மாமத யானை' கிருஷ்ணாவதாரத்தில் 'மரத்தால் மறைந்தது மாமத யானை' ●

## புடவையில் நமீதா?



# கிசு கிசு வேண்டாம்

**கோயில் கட்டிக் கொண்டாடும் அளவுக்கு ரசிகர்களைக் கொள்ளையடித்து வைத்திருப்பவர் நயன்தாரா. சிரிப்பால் எல்லோரையும் காலிபண்ணும் அழகு ராக்கெட் நம் கேள்விகளின்போது பவ்யமானது...**

***உங்க பக்தர்களுக்கு ஏதாவது நல்வாக்குச் சொல்லுங்க?***

''தயவு செஞ்சு பக்தர்கள்னு சொல்லாதீங்க. உலகத்துல கடவுளுக்கு மட்டும்தான் கோயில் கட்டணும். என்னை மாதிரி ஸ்டார்களிடம் அன்பும் அபிமானமும் வைத்தாலே போதுமானது.''

***அடிக்கடி சர்ச்சையில் மாட்டறீங்களே?***

''புகழின் மாற்று வடிவம்தான் சர்ச்சை... கிசுகிசு. திரையுலகத்துல கிசுகிசுக்கு மாட்டாதவங்க யாராவது இருக்காங்களா? அதுல அடிப்பட்டு வந்தவங்கதானே சார் இன்னைக்கு உயரத்துல இருக்காங்க!''

***கவர்ச்சியாக நடிப்பதிலே அதிக ஆர்வமா?***

'' 'ஐயா' படத்துல நான் ஹோம்லியாதானே அறிமுகமானேன். 'சந்திரமுகி', 'ஈ', 'யாரடி நீ மோகினி' போன்ற படங்கள்ல அது தொடர்ந்ததே! நான் கவர்ச்சியா நடிக்கறதுக்கு நான் மட்டும் காரணமல்ல!''

***பிரபலமா இருக்கறதால என்ன இழந்தீர்கள்?***

''என் சுதந்திரத்தை இழந்திருக்கிறேன். பொது இடத்துல என்னால நடந்துபோக முடியாது! ஒரு சாதாரண ஹோட்டல்ல சாப்பிட முடியாது. பிரபல நட்சத்திரமாக இருப்பதால் எந்தவொரு செயலிலும் தவறு நேராமல் பார்த்துக்கொள்ள வேண்டி இருக்கிறது. காரணம், எல்லோரும் என்னைப் போன்றவர்களைக் கவனித்துக் கொண்டுதான் இருக்கிறார்கள்.''

***வில்லு படம் எப்படி?***

''விஜய், சொல்றது மாதிரி, செம தில்லா வந்திருக்குது. தயவு செஞ்சு தியேட்டர்ல போய் படம் பாருங்க. !''

**- மகிமைராஜன்**

# Dr. KAMAKSHI MEMORIAL HOSPITAL

#1.RADIAL ROAD, PALLIKARANAI, CHENNAI- 600 100
PH: 22469200 66300300 9840049561. FAX: 22463282 66300400
E-mail: info@drkamakshimemorialhospital.org. Webside: drkamakshimemorialhospital.org.





Dr. T.G. Govindarajan
President - Founder - Medical Director

Dr.Kamakshi Memorial Hospital, Pallikaranai about 2kms from Velachery, is a 150 bedded super specialty hospital has created great strides in the field of health care in a very short duration. Started just three years ago, the hospital has turned out to be a referral institution. It has borne all specialties and state-of- the art facilities under roof. However it has evolved as a main referral centre in fields such as Cardiology, Cardiothoracic surgery, neurology and neuro surgery and Cancer treatment. Being the only major hospital in this part of the city, the hospital has evolved as a major trauma care centre. With round-the- clock casualty serviced and ICU managed in house intensivists it has saved many lives of accident victims. The hospital is also planning for an on-going trauma awareness and preventive programme. The hospital is the only one of its kind in this part of the world having all specialists starting from General Medicine & Intensive Care through Radiation Oncology services under one roof. The hospital has well qualified specialists offering high quality services in various specialities of Medicine & Surgery. Recently the hospital has the pride of inaugurating PET CT – the first of its kind in Tamilnadu in collaboration with Cancer institute, Adyar.

Principle: The guiding principle of the hospital is to offer the ***latest in health care facilities at Par with international standards (obviating the need to go abroad for treatment) and also make them available to increasing numbers of our population.***

To meet the stringent demands of quality health care the services of several talented and dedicated medical professionals (both within the country and overseas) has been and a huge investment made in infrastructure and medical equipments.

***ALL FACILITIES UNDER ONE ROOF.***



CT-SCAN



LINAC



CATH LAB



CABG – UNDER PROCESS



NEURO SURGERY



PET-CT – FIRST IN TAMILNADU

CARDIOLOGY, NEUROSURGERY, LAPAROSCOPY & ENDOSCOPY, CARDIAC SURGERY, NEPHROLOGY, OBSTERTICS & GYNAECOLOGY, TRAUMA CARE, ORTHOPAEDICS, GASTROENTEROLOGY, NEUROLOGY, NUCLEAR MEDICINE, ENT & OPHTHALMOLOGY, UROLOGY, BLOOD BANK, MAXILLOFACIAL SURGERY, ONCOLOGY – SURGICAL – RADIATION & MEDICAL ONCOLOGY

PET CT CENTRE AT CANCERINSITUTE (WIA)CANAL BANK ROAD, GANDHI NAGAR, ADYAR,CH-20
24 HRS PHARMACY & AMBULANCE SERVICES AVAILABLE



## Dr. KAMAKSHI GROUP OF HOSPITALS

LAKSHMI NURSING HOME, PALLAVARAM
PET – CT CENTRE, ADYAR
Dr. KAMAKSHI MEMORIAL MULTSPECIALITY CENTRE

